ஸ்ரீ:



# ஸ்ரீஶுத்3த4ஸத்வம் தொட்டாசார்யர் அருளிச்செய்த

# யதிராஜவிம்ஶதி வ்யாக்2யாநம்




பதிப்பாசிரியர்

ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதி

ஸ்ரீ.உ.வே.ரகுராமன் (பாலாஜி)ஸ்வாமி

க்ரந்தபரிபாலநட்ரஸ்ட்

*24/71, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி–620017*

Published with the financial assistance of
Mumbai based Srivaishnavites

ஸ்ரீ:



ஸ்ரீமதேராமாநுஜாய நம:
ஸ்ரீமத்$_3$வரவரமுநயே நம:

# ஸ்ரீபூத்$_3$த$_4$ஸத்வம் தொட்டாசார்யர்
## அருளிச்செய்த
# யதிராஜவிம்ஶதி வ்யாக்$_2$யாநம்




பதிப்பாசிரியர்
ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதி
ஸ்ரீ.உ.வே.ரகுராமன் (பாலாஜி)ஸ்வாமி
க்ரந்தபரிபாலநட்ரஸ்ட்

*24/71, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி–620017*

சித்திரை 7 — 20–4– 2010

## ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே ஶரணம்

## முகவுரை

மணவாளமாமுனிகள் பூர்வாஶ்ரமத்திலே திருவாய்மொழிப்பிள்ளையினுடைய திருவடிகளிலே ஆஶ்ரயித்து, அருளிச்செயலின் ஆழ்பொருள்களையெல்லாம் அவருபதேஶத்தாலே அறிந்துகொண்டு, சரமபர்வநிஷ்டராய் தமதாசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையையே ஶேஷிஎன்றும், உபாயம் என்றும், ப்ராப்யம் என்றும் கொண்டு எழுந்தருளியிருந்தார்; அது கண்டுகந்த திருவாய்மொழிப்பிள்ளை உத்தாரகாசார்யரும், க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யருமான உடையவர் திருவடிகளையே அவருக்கு எல்லாமாகக் காட்டிக்கொடுத்தருளினுர். இதனை 'ஶ்ரீமந்யதீந்த்₃ர தவ தி₃வ்ய பத₃ாப்₄ஜஸேவாம் ஶ்ரீஶைலநாத₂ கருணுபரிணும த₃த்தாம்' என்பதாலும்,

தேசந்திகழும் திருவாய்மொழிப்பிள்ளை
மாசில் திருமலையாழ்வார் என்னை நேசத்தால்
எப்படி எண்ணி நின்பால் சேர்த்தார் எதிராசா

என்ற ஆர்த்திப்ரபந்தப் பாசுரத்தாலும் அறியலாம்.

திருவாய்மொழிப்பிள்ளை ஆழ்வார் திருநகரியில் உடையவருக்குத் தனிக்கோயில் கட்டி, கோயிலைச்சுற்றி ராமாநுஜசதுர்வேதிமங்கலம் என்கிற திருவீதியையும் ஏற்படுத்தி அங்கே இராமானுசனைத் தொழும் பெரியோரையும் எழுந்தருளப்பண்ணினுர்.

மணவாளமாமுனிகள் தமக்குப் பிள்ளை தஞ்சமாகக் காட்டிக்கொடுத்த உடையவரிடம் மிகவும் ஈடுபட்டிருந்தார். அவ்வீடுபாட்டிற்குச் சேர அவ்வெம்பெருமானுர் விஷயமாக 'யதிராஜவிம்ஶதி' என்கிற ஸ்தோத்ரத்தை அருளிச்செய்தார்.

அப்போது அங்கிருந்த முதலிகள்

''வல்லார்கள் வாழ்த்தும் குருகேசர் தம்மை மனத்துவைத்துச்
சொல்லார வாழ்த்தும் மணவாளமாமுனி தொண்டர்குழாம்
எல்லாந்தழைக்க எதிராசவிம்சதி யீன்றளித்தோன்
புல்லாரவிந்தத் திருத்தாளிரண்டையும் போற்று நெஞ்சே''

என்று அநுஸந்தித்தார்கள்.

இப்ரபந்தம் இருபது ஶ்லோகங்கள் கொண்டபடியாலும், ஒவ்வொரு ஶ்லோகத்திலும் யதிராஜ, யதீந்த்ர என்று எம்பெருமானுரின் திருநாம நிர்தேஶமுள்ளபடியாலும் இதற்கு யதிராஜவிம்ஶதி என்ற பெயர் ஏற்பட்டது. பரமாசார்யரான ஆளவந்தார் ரஹஸ்யத்ரயத்திலுள்ள அறுபத்தைந்து அக்ஷரங்களை அடியொற்றி ப்ரதமபர்வமான எம்பெருமான் விஷயமாக அறுபத்தைந்து ஶ்லோகங்களை ஸ்தோத்ரரத்நத்திலே அருளிச்செய்தாப்போலே, சரமாசார்யரான மணவாளமாமுனிகள் ரஹஸ்யத்ரயத்திலுள்ள இருபது பதங்களைத் திருவுள்ளத்திலே கொண்டு சரமபர்வமான எம்பெருமானுர் விஷயமாக இருபது ஶ்லோகங்களாக யதிராஜவிம்ஶதியை அருளிச்செய்தார் என்பர் பெரியோர்.

யதிராஜவிம்ஶதிக்குத் தனியனிடாநின்ற எறும்பியப்பா யதிராஜவிம்ஶதியை 'யதிபதிப்ரஸாதி₃நீம்' என்கிருர். அதாவது இவ்வெதிராசவிம்சதி தன்னை

அநுஸந்தித்தவர்களை எம்பெருமானார் அநுக்ரஹிக்கும்படி செய்யவல்லதாகும் என்றபடி.

மணவாளமாமுனிகள் நியமித்த அஷ்டதிக்கஜாசார்யர்களுள் ஒருவரான ப்ரதிவாதிபயங்கரம் அண்ணா தம்முடைய வரவரமுநிஶதகத்தில் 'யது$_3$திதா' என்று தொடங்கும் ஶ்லோகத்தில் 'விஶத$_3$யத்யகி$_2$லம் ப$_4$விநாம் ஹிதம்' என்பதனால் யதிராஜவிம்ஶதி சேதநர்களுக்கு எல்லா நன்மைகளையும் தெளிவாகக் காட்டுகிறது என்றும், 'த்ராக்ஷாமதி$_4$க்ஷிபதி நிந்த$_3$திமாகரந்த$_3$த$_4$ராம் ஸுதாரஸஜ$_2$ரீமத$_4$ரீகரோதி' என்றவிடத்தில் தேனிலும், த்ராக்ஷையிலும், அம்ருதரஸத்திலும் விஞ்சிய மாதுர்யத்தையுடையது யதிராவிம்ஶதி என்றும், 'கே$_3$ாதே$_3$ாத$_3$ாரவச: ப்ரத$_3$ர்ஶித கு$_3$ரூபாயத்வநிஷ்ட$_2$ாஶ்ரயா யத்ஸூக்திர் யதிராஜவிம்ஶதிநுதிர் வேத$_3$ாந்த ஸிந்தே$_4$ாஸ்ஸுத$_4$ா' என்பதனால் வேதாந்தமாகிற பாற்கடலில் அமுதமான யதிராஜவிம்ஶதி ஆண்டாளுடைய அருளிச்செயல்களின் ஆழ்பொருளான ஆசார்யனே உபாயமென்னும் ஆசார்யநிஷ்டையைக் காட்டுகிறது என்றும், 'நிஸ்துல்யா ஸா யதிநரபதேர்விம்ஶதிரிதி' என்பதனால் யதிராஜவிம்ஶதிக்கு நிகரான ஸ்தோத்ரம் மற்றொன்றில்லை என்றும் அருளிச்செய்துள்ளதுகொண்டு யதிராஜவிம்ஶதியின் சிறப்பினை நாம் நன்குணரலாம்.

இதில் முதல் ஶ்லோகத்தால், தொடங்கிய ஸ்தோத்ரம் நன்கு நிறைவேறும் பொருட்டு ஆசார்யஅபிவாதநரூபமான மங்களம் செய்யப்படுகிறது. முதல் ஶ்லோகத்தில் எம்பெருமானாருடைய ஜ்ஞாநபூர்த்தியும், இரண்டாவது ஶ்லோகத்தில் அவருடைய அநுஷ்டாநபூர்த்தியும் பேசப்படுகிறது.

முதல் ஶ்லோகத்தில் திருவின்மணாளனான எம்பெருமானுடைய திருவடித் தாமரையிணையில் செய்யத்தக்க நித்யகைங்கர்யத்தில் உள்ள ப்ரேமத்தினாலே கலங்கின திருவுள்ளத்தையுடையவரான நம்மாழ்வாருடைய திருவடிகளில் மிகுந்த பக்தியையுடையவரும், தமது திருவடிகளை அடைந்தவர்களுடைய காமம் முதலான தோஷங்களைப் போக்கடிப்பவரும், யதிகளின் தலைவருமான எம்பெருமானாரைத் தலையால் வணங்குகிறேன் என்கிறார்.

இரண்டாவது ஶ்லோகத்தில் பெரியபெருமாளுடைய திருவடித்தாமரைகளில் விளையாடும் உயர்ந்த அன்னப்பறவை போன்றவரும், நம்மாழ்வாருடைய திருவடித்தாமரைகளில் பொருந்திய வண்டு போன்றவரும், பெரியாழ்வார் மற்றும் பரகாலரான திருமங்கையாழ்வார் ஆகியோரின் முகத்தாமரையை மலரச்செய்யும் ஸூர்யன் போன்றவரும், ஆழ்வானுக்கு உபாயமாகவிருப்பவருமான யதிராஜரைத் தொழுகிறேன் என்கிறார். மேலே மூன்று ஶ்லோகங்களாலே ப்ராப்யப்ரார்த்தனை செய்கிறார்.

மூன்றாவது ஶ்லோகத்தில் மனம் மொழி மெய் என்கிற மூன்றுகரணங்களாலும் உடையவர் திருவடிகளையே உபாயமாகக் கொண்டிருக்கும் ஆழ்வான், பிள்ளான் முதலான ஆசார்யர்களை இடைவிடாமல் சிந்திக்கக்கடவேன் என்கிறார். உபகாரகாசார்யர்களிடம் நன்றியுணர்ச்சி என்றென்றும் வேண்டும் என்கிறார்.

நான்காவது ஶ்லோகத்தில் தம்முடைய கரணங்கள் மூன்றும் எப்போதும்

எம்பெருமானுரிடத்திலேயே ஈடுபட்டிருக்கவேண்டும் என்கிறுர். அடியேனுடைய மநஸ்ஸானது எப்பொழுதும் தேவரீருடைய திவ்யமங்களவிக்ரஹத்தை த்யாநிப்பதிலேயே ஊன்றியிருக்கவேண்டும்; வாக்கானது தேவரீரது குணங்களைப் பேசுவதிலேயே ஈடுபட்டிருக்கவேண்டும்; கைகள் இரண்டின் செயல்பாடானது தேவரீருக்கு அடிமை செய்வதிலேயேயாக வேண்டும். முக்கரணங்களும் மற்றெதிலும் ஈடுபடாதிருக்கக்கடவன.

ஐந்தாவது ஶ்லோகத்திலே திருவஷ்டாக்ஷரம் என்னும் திருமந்த்ரத்தின் மூன்று பதங்களாலும் தேறின அநந்யார்ஹஶேஷத்வ அநந்யஶரணத்வ அநந்ய போக்யத்வங்களாகிற அர்த்தங்களிலே உறுதியும், ஶிஷ்டர்களில் தலைவரான ஆழ்வான் போல்வாரால் தொழத்தகுந்த தேவரீருடைய திருவடிகளில் இடைவிடாத அநுபவத்தையும் தந்தருளவேண்டும் என்கிறுர். இதற்கு மேல் ஏழுஶ்லோகங்களாலே போக்கப்படவேண்டியதான அநிஷ்டத்தைக் கூறுகிறுர்.

ஆறுவது ஶ்லோகத்திலே தாம் ப்ராப்யத்தில் ருசியில்லாதிருக்கிறபடியையும், மற்ற விஷயங்களில் ருசியானது மேன்மேலும் வளருகிறபடியையும் கூறி, இவ்விரண்டிற்கும் காரணமான தனது பாபத்தைப் போக்கியருளவேண்டும் என்கிறுர்.

ஏழாவது ஶ்லோகத்திலே அடியேன் ஶரீரத்தாலே மனிதனுகவிருந்தாலும், செயலாலே விலங்கைப்போன்றவன். இப்படியிருக்கச்செய்தேயும், 'எல்லா ஆத்மகுணங்களுக்கும் கொள்கலமானவன் இவன்' என்று பெரியோர்களும் பேசும்படியான வஞ்சகன் என்கிறுர்.

எட்டாவது ஶ்லோகத்திலே அடியேன் கெட்டசெயல்களையே செய்பவனுய், ஶப்தம் முதலிய விஷயங்களின் அநுபவத்தில் ஈடுபட்ட மனத்தையுடையனுய், ஶரணுகதன் என்ற பெயரை மட்டும் சுமப்பவனுயிருந்துகொண்டு, எப்பொழுதும் தேவரீர் திருவுள்ளம் புண்படும்படி துக்கத்தை உண்டுபண்ணுமவனுய், தேவரீர் திருவடிகளில் ஈடுபட்டவன்போல் ஶிஷ்டர்களின் கோஷ்டியில் பொய்யாகத் திரிந்தேனுதலால் மூர்க்கனுவிருக்கிறேன் என்கிறுர்.

ஒன்பதாவது ஶ்லோகத்திலே எந்நாளும் கொண்டாடத்தக்க ஆசார்யனையும், அவருபதேஶித்த மந்த்ரத்தையும், அம்மந்த்ரத்தின் பொருளான தேவதையையும் நித்யம் அவமதித்து சிறிதளவும் பயமில்லாமல், தேவரீர் திருவுள்ளத்திற்கு உகப்பானவற்றையே செய்பவன் போலே தேவரீருடைய அடியார்கள் திரளிலே புகுந்து, 'இவர்களை வஞ்சித்துவிட்டோமே' என்று மகிழ்ச்சியோடு திரிகிறேன் என்கிறுர்.

பத்தாவது ஶ்லோகத்திலே மூன்றுகரணங்களாலும் மூன்றுவிதமான அபசாரங்களைச் செய்துகொண்டு, தேவரீருக்கும் விருப்பமல்லாதவற்றையே செய்துகொண்டிருந்தாலும் தேவரீர் விரும்பக்கூடிய செயல்களையே செய்பவன் போல தேவரீருடைய அடியார்களை ஏமாற்றியதோடல்லாமல், தேவரீரையும் ஏமாற்றினேன் மூர்க்கனுன வடியேன் என்கிறுர்.

பதினேராவது ஶ்லோகத்திலே பாபகார்யத்தைச் செய்தால் தண்டனை

கிடைக்குமே என்ற பயமும், நாம் இத்தகைய செயலைச் செய்யலாமோ வென்கிற அநுதாபமும், இப்படிப் பாபம்புரிந்த நாம் பெரியோர்களின் திருமுன்பே எப்படிச்செல்வது என்கிற வெட்கமும் ஏற்பட்டால் மறுபடியும் பாபமிழைக்க நேராது; ஆனால் அடியேனோவென்றால் அறியாமையால் பயம், அநுதாபம், வெட்கம் ஆகிய இவை சிறிதுமில்லாமல் மீண்டும்மீண்டும் பாவச்செயல்களையே செய்கிறேன் என்கிறார்.

பன்னிரண்டாவது ஶ்லோகத்திலே பிறவிக்குருடன் கண்முன்னேயுள்ள பொருளைக் காணாதது போலே எல்லாப்பொருள்களின் உள்ளும் புறமும் நீக்கமற நிறைந்துள்ள எம்பெருமானைக் காணாதவனாய், காமபரவசனாய் (மற்ற பயன்களையே விரும்பும் மனத்தையுடையவனாய்) இருக்கிறேனாதலால் தேவரீர் திருமுன்பே வருவதற்கும் தகுதியற்றவனாயுள்ளேன் என்கிறார்.

பதின்மூன்றாவது ஶ்லோகத்திலே மூன்றுவிதமான தாபங்களினால் ஏற்பட்ட துக்கத்திலே அழுந்தியிருந்தபோதிலும் ,அடியேனுக்கு துக்கத்திற்கு இருப்பிடமான ஶரீரத்தைப் பேணுவதிலேயே ஆசையானது வளர்ந்துவருகின்றது; ஶரீரத்தைப் போக்கிக் கொள்வதில் விருப்பமுண்டாகவில்லை. இதற்கு அடியேனது பாபமே காரணமாகையால் ஸ்வாமியான தேவரீரே விரைவில் அந்தப் பாபத்தைப் போக்கியருளவேணுமென்கிறார்.

பதினான்காவது ஶ்லோகத்திலே வாயால் இவ்வளவென்று அளவிட்டுச் சொல்லவொண்ணாத நற்குணங்களை உடையவராய், ஆசார்யர்களின் தலைவராயுள்ள கூரத்தாழ்வானால் அருளிச்செய்யப்பட்ட எல்லாத்தாழ்வுகளுக்கும் கொள்கலமாக விருப்பவன் இவ்வுலகில் அடியேன் ஒருவனேயன்றி வேறொருவரில்லையாதலாலே தேவரீருடைய க்ருபையே அடியேனுக்குப் புகலிடம் என்கிறார்.

பதினைந்தாவது ஶ்லோகத்திலே தூய்மையான மனத்தையுடைவர்களான ஆளவந்தாராலேயும், ஆசார்யர்களின் தலைவரான ஆழ்வானாலேயும், ஆசார்ய ஶ்ரேஷ்டரான பராஶரபட்டராலேயும் தம்முடைய ஸ்தோத்ரங்களிலே சொல்லப் பட்ட எல்லாவிதமான தாழ்வுகளும் இவ்வுலகிலே இக்காலத்திலே அடியேனிடத் திலேயே குறைவில்லாமல் இருக்கின்றதாதலாலே அடியேனுக்குப் புகலிடம் தேவரீருடைய கருணையொழிய மற்றொன்றில்லை என்கிறார்.

பதினாறாவது ஶ்லோகத்திலே ஶப்தாதிவிஷயங்களை அநுபவிக்கவேண்டு மென்ற அடியேனுடைய ருசியானது தேவரீருடைய திருவருளாலே அடியோடழியக் கடவது; யாரொருவர் தேவரீரோடு ஸம்பந்தமுடையவர்களின் எண்ணிக்கையில் எல்லையிலிருக்கிறாரோ, அவருக்கு அடிமைப்பட்டிருப்பதிலேயே அடியேனுக்கு இடைவிடாத ஈடுபாடு இருக்கவேண்டுமென்கிறார்.

பதினேழாவது ஶ்லோகத்திலே உபநிஷத்துக்களாலே அறியத்தக்கவை களான தன் கல்யாணகுணங்களையும், திவ்யமங்களஸ்வரூபத்தையுமுடையனான எம்பெருமான் அனைவரும் கண்ணாலேயே கண்டுபற்றலாம்படி திருவரங்கத்திலே பெரியபெருமாளாக எழுந்தருளி, எல்லாக்காலமும் தேவரீருக்கு வசப்பட்டவனா யிருக்கையாலே, உம்மடியார்களின் பேற்றுக்குத் தடையான பாபங்களைப் போக்குவதில் தேவரீர் ஸமர்த்தரன்றோ வென்கிறார்.

பதினெட்டாவது ஶ்லோகத்திலே நிகழ்காலம் வருங்காலம் கழிகாலம் என்கிற மூன்றுகாலங்களிலும், மனம் வாக்கு மெய் என்கிற மூன்று கரணங்களினாலும், ப்ராயஶ்சித்தத்தாலும் அநுபவத்தாலும் போக்கவொண்ணாத அளவிறந்த பாபங்களைச் செய்தவனுக்கு எம்பெருமானுடைய பொறுமை மட்டுமே தஞ்சமாகும். அந்தப் பொறுமையானதோ தேவரீரால் பெரியபிராட்டிக்கு இனியவனான எம்பெருமானிடத்திலே ப்ரார்த்திக்கப்பட்டது என்பது யாதொன்றுண்டோ அதுவே தேவரீருடைய அடியார்களுக்கு பாதுகாப்பாகும் என்கிறார்.

பத்தொன்பதாம் ஶ்லோகத்திலே புலன்களை வென்றவர்களுக்குத் தலைவரான ஸ்வாமி எம்பெருமானாரே! திருமலையாழ்வாரென்கிற திருவாய்மொழிப்பிள்ளை தம்முடைய மிகுந்த கருணையினால் அளித்த தேவரீருடைய திருவடித்தாமரைகளில் கைங்கர்யத்தை எல்லாக்காலத்திலும் அடியார்களளவிலும் வளர்ந்தருள வேணும்; அக்கைங்கர்யத்திற்குப் புறம்பான ஶப்தாதிவிஷயங்களிலுள்ள ஈடுபாட்டை அடியோடழித்தருளவேணும் என்கிறார்.

இருபதாவது ஶ்லோகத்தில் கருணைக்கடலான எம்பெருமானாரே! 'இவன் ஶாஸ்த்ரஜ்ஞாநமும் ஆத்மகுணங்களும் சிறிதளவுமில்லாதவனாகையாலே நம்மையொழிய மற்றொரு புகலிடமில்லாதவன்' என்று திருவுள்ளம்பற்றி இக்காலத்திலே அடியேனுடையதான இந்த விண்ணப்பத்தை ஏற்றுக்கொண்டருள வேணும் (அப்படியே செய்கிறோம் என்று திருவுள்ளம்பற்றியருளவேணும்).

யதிராஜவிம்ஶதிக்கு பிள்ளைலோகம் ஜீயர், ஶுத்தஸத்த்வம் தொட்டாசார்யர் முதலானோர் மணிப்ரவாளத்திலும் திருமழிசை அண்ணாவப்பங்கார் ஸம்ஸ்க்ருதத்திலும் வ்யாக்யாநம் இயற்றியுள்ளனர். இதில் ஶுத்தஸத்வம் தொட்டாசார்யர் அருளிச்செய்த வ்யாக்யாநம் இதுவரை தெலுங்குலிபியிலேயே அச்சிடப்பட்டிருந்தது. அதனை இப்பொழுது முதன்முறையாகத் தமிழ்எழுத்தில் வெளியிடுகிறோம்.

தெலுங்குப் பதிப்பினை நமக்குத் தந்துதவிய கோயில் வித்வான் ஸ்ரீ.உ.வே. நரஸிம்ஹாசார்யஸ்வாமிக்கும் மற்றும் திருப்பதி ஸ்ரீ.உ.வே.வரதராஜன் ஸ்வாமிக்கும், திருக்கண்ணபுரம் ஸ்ரீ.உ.வே.ஶடகோபாசார்யஸ்வாமியைக் கொண்டு தெலுங்கு லிபியிலிருந்து தமிழ்எழுத்தில் எழுதுவித்து நமக்குக் கொடுத்து தவிய கோமடம் ஸ்ரீ.உ.வே.ஸம்பத்குமாராசார்யஸ்வாமிக்கும் எமது நன்றி உரித்தாகுக.

தெலுங்குப் பதிப்புடன் ஒப்பிட்டுப் பார்த்து பரிஶோதித்தளித்த கோயிலாத்தான் ஸ்ரீ.உ.வே.விஜயராகவாசார்யஸ்வாமிக்கும், கரியமாணிக்கம் ஸ்ரீ.உ.வே.வி. நாராயணன் ஸ்வாமிக்கும், மற்றும் அச்சுத்தாள்களைத் திருத்த அடியேனுக்கு உதவிய மீமாம்ஸா ஶிரோமணி ஸ்ரீ.உ.வே.பரதன்ஸ்வாமிக்கும் கைம்மாறு கருதாமல் இந்நூலை கணினி எழுத்துக்களில் வடிவமைத்த ஸ்ரீ.உ.வே. புத்தூர் ஆராவமுதன் ஸ்வாமிக்கும் தலையல்லால் கைம்மாறிலேனே.

தாஸன்
R.ரகுராமன்.

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத்$_3$வரவரமுநயே நம:

**ஸ்ரீஶாத்$_3$த$_4$ஸத்வம் தொட்டாசார்யர் அருளிச்செய்த**

# யதிராஜவிம்ஶதி வ்யாக்$_2$யானம்

**தனியன்**

**எறும்பியிலப்பா அருளிச்செய்தது**

य: स्तुतिं यतिपतिप्रसादिनीं व्याजहार यतिराजविंशतिम् ।
तं प्रपन्नजनचातकाम्बुदं नौमि सौम्यवरयोगिपुङ्गवम् ।।

*ய: ஸ்துதிம் யதிபதிப்ரஸாதி$_3$நீம் வ்யாஜஹார யதிராஜவிம்ஶதிம்।*
*தம் ப்ரபந்நஜநசாதகாம்பு$_3$த$_3$ம் நௌமி ஸௌம்யவரயோகி$_3$புங்க$_3$வம்।।*

***வ்யா.–*** *(ய:) ''யதிவரதத்த்வவிதே$_3$'' (வரவரமுநிஶதகம்–2) என்றும் ''கருணைக ஸிந்தே$_4$ா:'' (வரவரமுநிஶதகம்–100) என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானாருடைய அவதாரவிஶேஷமாகவும், அவர் தம்முடைய யாத$_2$ாத்ம்யத$_3$ர்ஶியாகவும், த$_3$யாம்பு$_3$ராஶியாகவும் ப்ரஸித்$_3$த$_4$ரான யாதொரு அழகியமணவாளமாமுனிகள். யச்ச$_2$ப்$_3$த$_3$ம் ப்ரஸித்$_3$த$_4$பராமர்ஶியிறே. (யதிபதிப்ரஸாதி$_3$நீம்) யதீநாம் பதி: – யதிபதி:. யதிபதே: ப்ரஸாத$_3$: அஸ்யாம் அஸ்தீதி – யதிபதிப்ரஸாதி$_3$நீ, தாம், என்று வ்யுத்பத்தியாய், ஜிதேந்த்$_3$ரியர்களுக்கு உத்தரோத்தரம் இந்த்ரி$_3$ய நிக்$_3$ரஹ விரோத$_4$ம் வாராமல் பண்ணியும், மேன்மேலும் இந்த்$_3$ரியநிக்$_3$ரஹம் அவிச்சி$_2$ந்நமாக அபி$_4$வ்ருத்$_3$த$_4$மாம்படி பண்ணியும் ரக்ஷகரான எம்பெருமானாருடைய ப்ரீதிவிஷயமானவென்னுதல். ''யதிபதிம் ப்ரஸாத$_3$யதீதி யதிபதிப்ரஸாதி$_3$நீ, தாம்'' என்று வ்யுத்பத்தியாய் தன்னை அநுஸந்தி$_4$த்தவர்கள் பக்கல் எம்பெருமானாரை அநுக்$_3$ரஹ ஶீலராம்படி பண்ணவற்றானவென்னுதல்.*

*இத்தால், இவர் எம்பெருமானாருடைய நிரபேக்ஷ உபாயத்வத்தையும் ஸம்ஸாரிகளுடைய ஸர்வப்ரகாராநதி$_4$காரித்வத்தையும் ''அந்வயாத$_3$பி சைகஸ்ய ஸம்யங்ந்யஸ்தாத்மநோ ஹரௌ। ஸர்வ ஏவ ப்ரமுச்யேரந் நரா: பூர்வே பரே தத$_2$ா।।'' (ப$_4$ாரத்$_3$வாஜஸம்ஹிதா 1–1–31) என்கிறபடியே இவர் ஸம்ப$_3$ந்த$_4$மே ஸர்வோத் தாரகமாகிறபடியையும் திருவுள்ளம்பற்றி இப்ரப$_3$ந்த$_4$ாநுஸந்த$_4$ாநமாத்ரத் தாலேயாகிலும் எம்பெருமானார் ஸம்ப$_3$ந்த$_4$முண்டாக அமையும் என்று அவர் தமக்கு ப்ரஸாத$_3$ஜநகமான இப்ரப$_3$ந்த$_4$த்தை அருளிச்செய்தார் என்கிறது. இரண்டு யோஜனையிலும் இப்ரப$_3$ந்த$_4$ம் எம்பெருமானாருக்கு அத்யந்தாபி$_4$மதமாகையாலே அத்தை அநுஸந்தி$_4$த்தவர்கள் பக்கல் எம்பெருமானார் தன்னடையே ப்ரஸாத$_3$த்தைப் பண்ணுவரென்கிறது.*

(ப்ரஸாதி$_3$நீம்) ''தாமரையாளாகிலும் சிதகுரைக்கும்''(பெரியாழ்.திரு 4–9–2) என்னுமாப்போலே இச்சேதநனை நாம் கடாக்ஷிப்பதில்லை என்றிருக்கும் எம்பெருமானுரையும் இப்ரப$_3$ந்த$_4$ம் ஸ்வஶ்ரவணமாத்ரத்தாலே அவன்தன்னிடத்தில் ப்ரஸாத$_3$த்தைப் பண்ணியல்லது நிற்கவொண்ணுதபடி பண்ணுவிக்குமென்கிறது. இவ்வர்த்த$_2$ம் ராமாநுஜாஷ்டகத்தில் ப்ரஸித்$_3$த$_4$மிறே. இது தன்னை ''சுரக்கும் திருவும் உணர்வும்'' (இரா.நூ 43) என்று அமுதனர் அருளிச்செய்தாரிறே.

(யதிராஜவிம்ஶதிம்) ப்ரதிஶ்லோகமும் யதிராஜஶப்$_3$த$_3$த்தையிட்டுச் சொல்லுகையாலே யதிராஜவிம்ஶதி என்கிற திருநாமமுடையவென்னுதல்; இதிலொரு ஶ்லோகத்தை அநுஸந்தி$_4$க்கவே அநுஸந்த$_4$ாத்ருவிஷயத்தில் ப்ரேமம் கரைபுரண்டு ஓராயிரத்திற்படியே இருபதுபடியாய்த்து எம்பெருமானர் இவன் தனக்கு ரக்ஷகராம்படியுமென்றது. இதில் படியென்று திருமேனி. (ஸ்துதிம்) ஸ்தோத்ரத்தை. ''ஸ்தூயத இதி ஸ்துதி:'' என்று எம்பெருமானருடைய கு$_3$ணுநுப$_4$வரூபமான இப்ரப$_3$ந்த$_4$த்தை. (வ்யாஜஹார) இஶ்ஶப்$_3$த$_3$ம் ''ஜஹார, ஆஜஹார, வ்யாஜஹார'' என்று த்ரிப்ரகாரமாயிருக்கையாலே ''எந்தை திருவாய்மொழிப்பிள்ளை யின்னருளால் வந்த உபதேசமார்க்கத்தை'' (உப.ரத்.1) என்கிறபடியே பூர்வாசார்யர்களுடைய உபதே$_3$ஶபரம்பராப்ராப்தமான அர்த்த$_2$த்தை ஸம்ஸாரிகளுடைய து$_3$ர்க$_3$தியைக்கண்டு பொறுக்க மாட்டாதே இப்ரப$_3$ந்த$_4$ரூபேண அருளிச்செய்தார் என்கிறது.

அவ்வழியாலே, உபகாரகராய் அத ஏவ (ப்ரபந்நஜநசாதகாம்பு$_3$த$_3$ம்) ப்ரபந்நஜநங்களுண்டு – பராபி$_4$மாநமே உத்தாரகம் என்றிருக்குமவர்களாகிற சாதகங்களுக்கு வர்ஷுகவலாஹகரான; ப்ரபந்நஜநங்களை சாதகங்களாகவும், இவரை அம்பு$_3$த$_3$மாகவும் நிரூபிக்கையாலே சாதகங்களுக்கு வர்ஷபி$_3$ந்து$_3$வன்றிக்கே த$_4$ாரகமில்லாதாப்போலேயாய்த்து ப்ரபந்நஜநங்களுக்கு பராபி$_4$மாநமின்றியே உஜ்ஜீவநோபாயமில்லையென்கையும். அம்பு$_3$த$_3$மாவது – ஸமுத்$_3$ரோத$_3$கத்தை தான் பருகி ஸ்வஸம்ப$_3$ந்த$_4$த்தாலே அதன் லாவண்யத்தைப்போக்கி மாது$_4$ர்யத்தை உண்டாக்கி அத்தை ஸர்வோபபே$_4$ாக்$_3$யமாகக் கொடுக்குமாப்போலே இவரும் யதீந்த்$_3$ராக்$_2$யபத்$_3$மாகரக$_3$தமான ப$_4$க$_3$வத்காருண்யரஸத்தைத் தாமநுப$_4$வித்து, அதில் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்தாலே வரும் அவைரஸ்யத்தை மாற்றி ஸாபராத$_4$சேதந ரக்ஷணோபயோகி$_3$யாக்கி அத்தை ஸர்வர்க்கும் கொடுக்குமவரென்கையும், நிரபேக்ஷோபகாரகர் என்கையும் பரஸம்ருத்$_3$தி$_4$யே ஸ்வஸம்ருத்$_3$தி$_4$யாயிருக்குமவரென்கையும், தாம் நூதநமாக ஓரர்த்த$_2$த்தைக் கல்பித்து உபதே$_3$ஶிக்கையன்றிக்கே, உபதே$_3$ஶபரம்பராப்ராப்தமான அர்த்த$_2$த்தையே உபதே$_3$ஶித்தாரென்கையும் தோற்றுகிறது. அன்றிக்கே, ஸம்ப$_3$ந்தி$_4$களான ஜநங்களாகிற சாதகங்களுக்கு வர்ஷுகவலாஹகரான என்னுமாம். அப்போதைக்கு எம்பெருமானருடைய கல்யாணகு$_3$ணங்களை தாம் அநுப$_4$வித்து, அவைகளை தத்ஸம்ப$_3$ந்தி$_4$களுக்கு பே$_4$ாக்$_3$யமாக உபதே$_3$ஶிக்குமவரென்கிறது. ''ப$_4$க$_3$வத்$_3$வந்த$_3$நம் கார்யம் கு$_3$ருவந்த$_3$நபூர்வகம்'' என்று ததீ$_3$ய விஷயத்திலுமொக்குமிறே. (ஸௌம்யவர

*யோகி3புங்க3வம்) மஹோபகாரகராகையாலே ஸத3ா த3ர்ஶநீயராய் மங்க3ளாவஹராய் இவ்விரண்டாகாரத்தாலே பெருமதிப்புத் தம் திருவுள்ளத்தில் தட்டாதவராய், பரஸம்ருத்3தி4யே ப்ரயோஜநமாயிருக்கிற அழகியமணவாள மாமுனிகளை. (நௌமி) பெரியஜீயர் திருவடிகளை ஆஶ்ரயித்து அதி4க3த பரமார்த்த2ரான எறும்பியிலப்பா, யதிவரப்ரஸாத3ஜநகமான இப்ரப3ந்த4த்தை உபகரித்தருளின மஹோபகாரத்துக்கு தோற்றுத் தம்மை அத்தலைக்கு ஶேஷமாக்கிக் கொடுக்கிறார். 'ஞு–ஸ்தௌ'இறே. இத்தால் அஹங்கார நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. அதாவது – ஸ்வஸ்மிந் ஸ்வார்ஹதாநிவ்ருத்தி. ஶாணோல்லீடமான மணிக்கு ஒளி ஸ்வாப4ாவிகமிறே.*

**தனியன் வ்யாக்2யானம் முற்றிற்று.**

# ——— # ——— # ——— #

## யதிராஜவிம்ஶதி வ்யாக்2யாநாவதாரிகை.

*ஶ்ரிய:பதியாய், பரமகாருணிகனான ஸர்வேஶ்வரன் அந்தமில்பேரின்பமான த்ரிபாத்3விபூ4தியிலே ஶ்ரீவைகுண்ட2ாக்2ய தி3வ்யநக3ரத்திலே ஸஹஸ்ரஸ்தம்ப4 ஶோபி4தமான திருமாமணிமண்ட3பத்திலே ஸஹஸ்ரப2ணமண்ட3ல மண்டி3தனான திருவநந்தாழ்வானாகிற கோப்புடைய சீரியசிங்காசனத்தில் ''திருமகள் மண்மகளாயர்மடமகள்'' (திருவாய் 1–9–4) என்கிற லக்ஷ்மீபூ4மிநீளா ஸமேதனாய் ஏழுலகும் தனிக்கோல்செல்ல வீற்றிருந்து ''க்3ருஹீததத்தத்பரிசார ஸாத4நைர் நிஷேவ்யமாணம் ஸசிவைர்யதே2ாசிதம்'' (ஸ்தோ.ர.43) என்கிற படியே சத்ரசாமரதாளவ்ருந்தாத்3யநேககைங்கர்யோபகரண ஶோபி4தஹஸ்தரான அயர்வறுமமரர்களாலே அநவரத3பரிசர்யமாணசரணநளிநனாய்க் கொண்டு ''ஏதத் ஸாமக3ாயந் நாஸ்தே'' (தை.ப்4ருகு3) ''சாமவேத கீதனாய'' (திருச்சந்த 14) ''தன்னையின்கவிபாடிய வீசனை'' (திருவாய் 7–9–1) ''யானாய்த் தன்னைத் தான்பாடி தென்னாவென்னும்மென்னம்மான்'' (திருவாய் 10–7–5) என்கிறபடியே ஸஹஸ்ர ஶாகே2ாபநிஷத்3ரூபமான திருவாய்மொழி கேட்டருளாநிற்க ''ஸ ஏகாகீ ந ரமேத'' (மஹோபநிஷத்) ''ஆற்றல்மிக்காளும்'' (திருவாய் 4–5–1) ''நாதிஸ்வஸ்த2மநா:'' (?) என்கிறபடியே தே3ஶாந்தரக3தனான புத்ரனிடத்தில் பித்ருஹ்ருத3யம் செல்லுமாப்போலே ஸம்ஸாரிசேதநரிடத்தில் திருவுள்ளம் குடிபுகுந்து உண்டதுருக்காட்டாதே ஸம்ப3ந்த4மொத்திருக்க இவர்கள் இவ்வநுப4வத்தை இழந்திருக்கிறது தந்தாமையறியாமையாலேயன்றோவென்று போரநொந்து திருவுள்ளமிரங்கி, ''இனியாகிலும் இவர்கள் உஜ்ஜீவிக்கும் விரகறியும்படியென்' என்று விசாரித்து , ''சென்றால் குடையாமிருந்தால் சிங்காசனமாம்'' (முதல் திரு 53) ''நிவாஸஶய்யாஸநபாது3கா'' (ஸ்தோ.ர.40) இத்யாதி3யிற்படியே தம் திருவடிக ளிலே ஒழிவில்காலத்திற்படியே எல்லா அடிமைகளும் தாமொருவருமே செய்வதாகப் பாரித்துக்கொண்டிருக்கிற திருவநந்தாழ்வானைக் கடாக்ஷித்தருள, அவனும் ''ததஸ்ததி3ங்கி3தம் தஸ்ய ஜாநந்நேஷ ஜக3ந்நிதே4: । தஸ்மிந் த4ாம்நி ஶட2ாராதே: புரே புநரவாதரத்'' (யதீந்த்3ரப்ரவணப்ரப4ாவம்) ''பூ4த்வா பூ4யோ*

வரவரமுநிர்யோகி$_3$நாம் ஸார்வபௌ$_4$மம:'' (ஸ்ரீஶைலேஶாஷ்டகம்–1) என்கிறபடியே ப$_4$ாவஜ்ஞனாகையாலே ஸம்ஸாரிகளை *......த்தவர்களுக்கு இருப்பிடமான இவ்விபூ$_4$தியிலே மாறன் மறை பயிலுமவராகையாலே ஆழ்வார் திருவவதார ஸ்த$_2$லமான திருநக$_3$ரியிலே அழகியமணவாளமாமுனிகளாய் திருவவதரித்து திருவாய்மொழிப்பிள்ளை சீரருளாலே யதிவரதத்த்வவித்தமராய் ஸம்ஸாரிகள் து$_3$ர்க$_3$தியைக்கண்டு திருவுள்ளமிரங்கி இவர்கள் ''ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே'' (லக்ஷ்மீதந்த்ரம் 17–80) என்கிறபடியே ரக்ஷ்யாபேக்ஷாப்ரதீக்ஷரான ப$_4$க$_3$வத்$_3$விஷயத்துக்கு ஆளாகாமையைத் திருவுள்ளம்பற்றி, இனி இவர்களுக்கு ''காரேய் கருணையிராமானுசா'' (இரா.நூ.25) என்கிறபடியே ''க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரான எம்பெருமானார் ஸம்ப$_3$ந்த$_4$மின்றி மற்றொரு உஜ்ஜீவநோபாய மில்லை'' என்று அறுதியிட்டு உபதே$_3$ஶாதி$_3$களாலே அறிவிக்கப்பார்க்கில் ஸ்வோத்கர்ஷாதி$_3$களையிட்டு அந்யதா$_2$கரிப்பர்களென்று ''யத்$_3$யதா$_3$சரதி ஶ்ரேஷ்ட$_2$:'' ( கீ$_3$தை 3–21) என்கிற ந்யாயத்தைத் திருவுள்ளம்பற்றி ஸ்வாநுஷ்டா$_2$னத்தாலே திருத்தப்பார்க்கிறார் இப்ரப$_3$ந்த$_4$த்தில். அநுஸந்தா$_4$த்ரு விஷயத்தில் எம்பெருமானார்க்கு க்ருபை பண்ணியல்லது நிற்கவொண்ணாத படியான இப்ரப$_3$ந்த$_4$த்தை அருளிச்செய்கிறாராகவுமாம்.

எம்பெருமானாருடைய உபாயத்வமாய்த்து ப்ரதிபாதி$_3$க்கப்படுகிறது உபக்ரமோபஸம்ஹாரங்களில் அநிஷ்டநிவ்ருத்திபூர்வக இஷ்டப்ராபகத்வம் ஶுத்$_3$த$_4$மாகத் தோற்றுகையாலே. எங்ஙனேயென்னில் – உபக்ரமத்தில் ''ஸ்ரீமாத$_4$வாங்க்$_4$ரிஜலஜத்$_3$வயநித்யஸேவா ப்ரேமாவிலாஶயபராங்குஶபாத$_3$ ப$_4$க்தம்'' என்று ததீ$_3$யபர்யந்தமான ப$_4$க$_3$வத்கைங்கர்யத்தை ப்ரஸக்திபண்ணி, மேல் ''காமாதி$_3$தோ$_3$ஷஹரம்'' என்று தத்$_3$விருத்$_3$த$_4$ங்களான காமாதி$_3$தோ$_3$ஷங்களுக்கு நிவாரகர் என்கையாலும், முடிவில் ''தாமந்வஹம் மம விவர்த$_4$ய நாத$_2$! தஸ்யா: காமம் விருத்$_3$த$_4$மகி$_2$லம் ச நிவர்த்தய த்வம்'' என்கையாலும் உபாயம் எம்பெருமானார் என்கிறது.

த்$_3$வயத்தில் பூர்வோத்தர க$_2$ண்ட$_3$ங்களாலே உபாயோபேயங்களுடைய ஐக்யம் சொல்லப்படாநிற்க, இங்கு உபாயம் எம்பெருமானாரும் உபேயம் எம்பெருமான் என்கையும் சேருமோவென்னில், சேரும். அங்கும் திருவடிகளை உபாயமாகவும் ஶ்ரிய:பதியை உபேயமாகவும் சொல்லிற்றிறே. அங்குத் திருவடிகள் அநந்யங்க$_3$ளன்றோவென்றால், இவர்தாமும் திருவடிகளாகையாலே அநந்யராகக் குறையில்லை. ஆகையாலேயிறே ''விஷ்ணுஶ்ஶேஷீ'' (பெரியவாச்சான் பிள்ளை அருளியதாக ஸ்ரீவைஷ்ணவஸமயாசார நிஷ்கர்ஷத்தில் எடுக்கப்பட்ட ஶ்லோகம்) என்கிற ஶ்லோகம் திருவவதரித்தது.

அன்றிக்கே, இவர்தாமே உபாயமும் உபேயமுமாகையாலே ஐக்யமென்னவுமாம். சரமோபாயோபேயங்கள், ப்ரத$_2$மோபாயோபேயங்களுக்கு ஶேஷங்களாகையாலே ப்ரபத்திஶாஸ்த்ரவிரோத$_4$மில்லை.

* ஶிதிலம்

இனி உபாயத்துக்கு வேண்டுவது – விஷயபூர்த்தியும், அபராத$_4$ பூ$_4$யஸ்த்வமும், ஆகிஞ்சந்யமும், அநந்யக$_3$தித்வமும், உபாயோபேய ப்ரார்த்த$_2$னை (உபேயப்ரார்த்த$_2$னை)யுமாகையாலே அதில் முதலிரண்டு ஶ்லோகத்தாலே விஷயபூர்த்தியையும், மேல் ஶ்லோகத்ரயத்தாலே ப்ராப்யப்ரார்த்த$_2$னையையும், மேல் ஶ்லோக ஸப்தகத்தாலே தம்முடைய ஆகிஞ்சந்யத்தையும், தம்முடைய தே$_3$ாஷபூ$_4$யஸ்த்வத்தையும், மேலொருஶ்லோகத்தாலே விரோதி$_4$நிவ்ருத்தி ப்ரார்த்த$_2$னையையும், மேலிரண்டு ஶ்லோகத்தாலே தம்முடைய அநந்யக$_3$தித்வத்தையும், மேலொரு ஶ்லோகத்தாலே விரோதி$_4$நிவ்ருத்திபூர்வக ப்ராப்யசரமாவதி$_4$ ப்ரார்த்த$_2$னையையும், மேலொரு ஶ்லோகத்தாலே அத்தலையில் கார்யகரத்வோபயோகி$_3$யான ஶக்தி விஶேஷத்தையும், மேலொரு ஶ்லோகத்தாலே எம்பெருமானுருடைய ஸ்வஸம்ப$_3$ந்தி$_4$பரம்பராவிஷயமாக ப்ரவ்ருத்தமான ப$_4$க$_3$வதே$_3$கோபாயத்வ ப்ரார்த்த$_2$னையே தத்ஸம்ப$_3$ந்தி$_4$களுக்கு ரக்ஷகமென்னுமத்தையும், மேலொரு ஶ்லோகத்தாலே ஆசார்யருசிபரிக்$_3$ருஹீதமாமதுவே தத்ஸம்ப$_3$ந்தி$_4$களுக்கு ப்ராப்யமென்னுமத்தையும் அருளிச்செய்து, நிக$_3$மத்தில் அடியேனுடைய அஜ்ஞாநாதி$_3$களைக் கடாக்ஷித்து இவன் அநந்யக$_3$திகனென்று திருவுள்ளம்பற்றி, இப்ரப$_3$ந்த$_4$ரூபமான அடியேன் விண்ணப்பத்தை அங்கீ$_3$கரித்தருளவேணுமென்று விண்ணப்பம் செய்து தலைக்கட்டுகிறார்.

இதில் ப்ரதிஶ்லோகமும் எம்பெருமானாரை 'யதிராஜ' 'யதீந்த்$_3$ர' என்று ஸம்பே$_3$ாதி$_4$க்கிறது; ''யதத இதி –யச்ச$_2$தீதி–யதி:'' என்கிற வ்யுத்பத்தித்$_3$வயத்தாலும் சொல்லப்படுகிற ப்$_3$ரஹ்மப்ராப்திப்ரயத்நமும், இதரவிஷய வைராக்$_3$யமுமே இவருக்கு ப்ரகாஶஹேதுவாகையாலேயென்றாதல், ஸ்வார்த்த$_2$ப்ரயத்நத்தையும், இதரவிஷயத்தோடே சேர்த்து அதில்நின்றும் வ்யாவ்ருத்தராய், பரார்த்தை$_2$க ப்ரயத்நபரராயிருக்குமதுவே தத்ஸம்ப$_3$ந்தி$_4$களுக்கு பற்றாசென்று இருக்குமவராகையாலேயென்றாதல். இதிறே இங்குத்தைக்கு அஸாத$_4$ாரணமான கு$_3$ணம்.

திருவாய்மொழிநூற்றந்தாதி திருவாய்மொழிக்கு ஸங்க்$_3$ரஹமானாப் போலவும், உபதேசரத்தினமாலை கு$_3$ருபரம்பராஸங்க்$_3$ரஹமானாப்போலவும் இப்ரப$_3$ந்த$_4$ம் ப்ரபந்நகாயத்ரீஸங்க்$_3$ரஹமாயிருக்கும்.

<u>அவதாரிகை முற்றிற்று.</u>

---

**ஸ்ரீமணவாளமாமுனிகள் அருளிச்செய்த யதிராஜவிம்ஶதி**

श्रीमाधवाङ्घ्रिजलजद्वयनित्यसेवाप्रेमाविलाशयपराङ्कुशपादभक्तम् ।
कामादिदोषहरमात्मपदाश्रितानां रामानुजं यतिपतिं प्रणमामि मूर्ध्ना ।। (१)

**ஸ்ரீமாத$_4$வாங்க்$_4$ரிஜலஜத்$_3$வயநித்யஸேவா**
**ப்ரேமாவிலாஶயபராங்குஶபாத$_3$ப$_4$க்தம்।**
**காமாதி$_3$தே$_3$ாஷஹரமாத்மபத$_3$ாஶ்ரிதாநாம்**
**ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமி மூர்த்$_4$நா॥**

***அவ.–*** *முதல் ஶ்லோகத்தில் எம்பெருமானாருடைய ஜ்ஞாநபூர்த்தியையும், அதினுடைய ஸம்ப்ரத$_3$ாயப்ராப்தியையும் அத்தால் இவர் பெற்ற நன்மையையும் அருளிச்செய்யாநின்றுகொண்டு ப்ராரீப்ஸிதக்$_3$ரந்த$_2$பரிஸமாப்த்யர்த்த$_2$ம் ஆசார்யாபி$_4$வாத$_3$நரூப மங்க$_3$ளத்தைச் செய்தருளுகிறார்.*

***வ்யா.–*** *(ஶ்ரீமாத$_4$வேத்யாதி$_3$) மாயா த$_4$வ: மாத$_4$வ: என்கிற வ்யுத்பத்தியாலே ஶ்ரிய:பதிக்கு வாசகமான மாத$_4$வஶப்$_3$த$_3$த்துக்கு விஶேஷணமாகையாலே ஶ்ரீஶப்$_3$த$_3$ம் ஶ்ரிய:பதியினுடைய ''திருவுக்கும் திருவாகிய செல்வா'' (பெரியதிரு 7–7–1) என்றும் ''கஶ்ஶ்ரீஶ்ஶ்ரிய:'' (ஸ்தோ.ர.12) என்றும் ''ஶ்ரியஶ்ஶ்ரியம்'' (ஸ்தோ.ர.45) என்றும் சொல்லுகிறபடியே ஸர்வமங்க$_3$ளாவஹையான பெரியபிராட்டிக்கும் மங்க$_3$ளாவஹன் என்கிற மேன்மையைச் சொல்லுகிறது. அன்றிக்கே, ஶ்ரீஶப்$_3$த$_3$ம் லக்ஷணயா ஶ்ரீமத்$_3$வாசகமாய் மேல் சொல்லப்படுகிற பிராட்டி ஸம்ப$_3$ந்த$_4$த்தாலே தலையெடுத்த வாத்ஸல்யாதி$_3$கு$_3$ணஸம்ருத்$_3$த$_4$ன் ஶ்ரிய:பதி என்னுமத்தைச் சொல்லுகிறது. அதுவுமன்றிக்கே, ஶ்ரீஶப்$_3$த$_3$ம் மாஶப்$_3$த$_3$த்துக்கு விஶேஷணமாய் ஶ்ரீயான மாவென்று பிராட்டியுடைய ப்ராப்யத்வ புருஷகாரத்வோபயோகி$_3$களான ஸேவ்யஸேவநாதி$_3$ ப$_4$ாவங்களையும் ஜ்ஞாநஸ்வரூப ஜ்ஞாநகு$_3$ணகத்வாதி$_3$களையும் சொல்லுகிறது.*

*அங்ஙனுமன்றிக்கே, ''ஶ்ரியா மாத$_4$வ:' என்று வ்யுத்பத்தியாய் ஶ்ரீஶப்$_3$த$_3$த்தாலே ''யதி$_3$த$_3$ம்ஸௌந்த$_3$ர்யலாவண்யயோ:'' (ஶ்ரீஸ்தவம் 7) என்கிறபடியே ஸௌந்த$_3$ர்ய ஸௌகுமார்யாதி$_3$ கு$_3$ணஸம்ருத்$_3$தி$_4$யைச் சொல்லி, அத்தாலே பிராட்டிக்கு வல்லப$_4$னென்னுமத்தைச் சொல்லுகிறது. அங்ஙனுமன்றிக்கே மாத$_4$வஶப்$_3$த$_3$ம் ரூட்$_4$யா ப$_4$க$_3$வத்$_3$ வாசகமாய் ''ஶ்ரியாயுக்தோ மாத$_4$வ:'' என்று மத்$_4$யமபத$_3$லோபஸமாஸமாய், ஶ்ரிய:பதியினுடைய என்றுமாம்.*

*அங்ஙனுமன்றிக்கே, ஶ்ரீஶப்$_3$த$_3$ம் அங்க்$_3$ரித்$_3$வயஶப்$_3$த$_3$த்துக்கு விஶேஷணமாய் திருவடிகளுடைய பரஸ்பரஸாஹித்யத்தால் வந்த ஶோப$_4$ாதிஶயத்தைச் சொல்லவுமாம். மாத$_4$வஶப்$_3$த$_3$த்தாலே த்$_3$வயத்தில் பூர்வோத்தரக$_2$ண்ட$_3$ங்களில் ஶ்ரீமச்ச$_2$ப்$_3$த$_3$ார்த்த$_2$மும் கு$_3$ணஸம்ருத்$_3$தி$_4$வாசகமான ஶ்ரீஶப்$_3$த$_3$த்தாலே பூர்வோத்தர க$_2$ண்ட$_3$ங்களில் நாராயணஶப்$_3$த$_3$ார்த்த$_2$மும் சொல்லப்பட்டது. ஆக ஸமஸ்த கல்யாணகு$_3$ணாத்மகனான ஶ்ரிய:பதியினுடையவென்கையாலே ப்ராப்யமும் ப்ராபகமும் ஒருமிது$_2$நமென்கிறது.*

*(அங்க்$_3$ரிஜலஜ) ஸௌந்த$_3$ர்யஸௌக$_3$ந்த்$_3$ய ஸௌகுமார்யாதி$_3$களாலே தாமரைக்கு ஒரு போலியான திருவடிகளுடைய. மாத$_4$வாங்க்$_4$ரி என்கையாலே திருவடிகளுடைய உத்$_3$தே$_3$ஶ்யத்வமும், ஜலஜஸாம்யத்தாலே அநுத்$_3$தே$_3$ஶ்ய மாயிருந்ததேயாகிலும் விடவொண்ணாத பே$_4$ாக்$_3$யதாதிஶயமும் சொல்லப் படுகிறது. (த்$_3$வய) இரண்டினுடைய; இத்தால் – ஸஹாயாந்தரநைரபேக்ஷ்யமும் ஸத்$_3$ருஶாந்தரராஹித்யமும் பரஸ்பரஸாஹித்யத்தால் வந்த ஶோப$_4$ாதிஶயமும் சொல்லப்படுகிறது. அங்க்$_3$ரிஜலஜத்$_3$வயவென்கையாலே சரணஶப்$_3$த$_3$மும் த்$_3$விவசநார்த்த$_2$மும் சொல்லப்படுகிறது.*

(நித்ய) ''ஒழிவில்காலமெல்லாம் உடனுய்மன்னி'' (திருவாய் 3–3–1) ''ஸர்வேஷு தே$_3$ஶகாலேஷு ஸர்வாவஸ்த$_2$ாஸுசாச்யுத। கிங்கரோஸ்மி'' (ஜிதந்தே) என்கிறபடியே ஸர்வதே$_3$ஶஸர்வகாலஸர்வாவஸ்தை$_2$களிலும் உளதான ''நித்யோ நித்யாநாம்'' (ஶ்வேதா 6–13) ''ஒண்பொருள் ஈறில'' (திருவாய் 1–2–10) என்கிறபடியே ஸ்வரூபம் நித்யமாஞல் தன்நிரூபகத$_4$ர்மமும் நித்யமாய்ச் செல்லுமிறே. (ஸேவா) த$_3$ாஸ்யபர்யாயமான ஸேவாஶப்$_3$த$_3$த்தாலே ''வழுவிலாவடிமை'' (திருவாய் 3–3–1) என்கிறபடியே ஸ்வபே$_4$ாக்த்ருத்வ க$_3$ந்த$_4$ரஹிதமான கைங்கர்யத்தைச் சொல்லுகிறது.

இதுதான் ஸமஸ்தகல்யாணகு$_3$ணத்மகனுன ஶ்ரிய:பதிவிஷயத்தில் செய்யுமதாகையாலே ஸுக$_2$ரூபமாயும் ஸ்வரூபாநுரூபமாயுமிருக்கும். இத்தால் த்$_3$வயத்தில் பூர்வக$_2$ண்ட$_3$த்தில் ''ஶரணம் ப்ரபத்$_3$யே'' என்கிற பத$_3$ங்களுடைய அர்த்த$_2$மும் உத்தரக$_2$ண்ட$_3$த்தில் நமஶ்ஶப்$_3$த$_3$ார்த்த$_2$த்தோடு கூடின சதுர்த்$_2$யர்த்த$_2$மும் சொல்லப்படுகிறது. ப$_4$ஜநபர்யாயமான ஸேவாஶப்$_3$த$_3$ம் உபாயவாசிறே. இதுதானும் ஈஶ்வரக்ருஷி ப$_2$லமாகையாலே ப்ராப்யாந்தர்க$_3$தமாயிறே இருப்பது. ஆக, இவ்வளவால் த்$_3$வயார்த்த$_2$ம் சொல்லப்படுகையாலே, உபாஸகனுக்கு ஸ்மர்த்தவ்யவிஷயஸாரஸ்யத்தாலே உபாஸநம் அத்யர்த்த$_2$ப்ரியமாயிருக்கிறுப் போலே ப்ரபந்நாதி$_4$காரிகளுக்கு த்$_3$வயம் அத்யர்த்த$_2$ப்ரியமென்கிறது. ப்ரபந்நஜந கூடஸ்த$_2$ரிறே ஆழ்வார். (ப்ரேம) ப்ரேமஶப்$_3$த$_3$த்தாலே ப்ராப்தமுமாய் பே$_4$ாக்$_3$யமுமாய் ஸ்வரூபாநுரூபமான நித்யகைங்கர்யத்திலே ப்ரேமை இராவிடில் த$_4$ரிக்கமாட்டாதபடியான ப்ரேமத்தைச் சொல்லுகிறது. இத்தால் ப்ராப்யத்வராதிஶயத்தைச் சொல்லுகிறது. (ஆவிலாஶய) ஆஶயமாவது – அபி$_4$ப்ராயம். அதாவது நிஶ்சயாத்மக ஜ்ஞாநம். இத்தால் ஈஶ்வரனே உபாயோபேயங்கள் என்கிற அத்$_4$யவஸாயத்தைச் சொல்லுகிறது. ஆவிலமாவது – ப்ராப்யத்வராதிஶயத்தாலே அநந்யோபாயத்வ விரோதி$_4$யான மடலெடுக்கை முதலான ஸ்வயத்நத்திலே அந்வயிக்கை.

ஆனுல் இது கூடுமோவென்னில், ஸ்வஸ்வரூபத்தைப்பற்றிவரும் கலக்கமாய்த்து த்யாஜ்யமாகிறது. அத்தலையில் வைலக்ஷண்யமடியாக வருமவையெல்லாம் ப்ராப்யாந்தர்க$_3$தமாகையாலே கூடும். ஆக இப்படிக் கலங்கின ஆஶயத்தையுடையரான. (பராங்குஶ) பரர்களுண்டு – ஈஶ்வரனுக்கு கு$_3$ணமில்லை, விக்$_3$ரஹமில்லை, விபூ$_4$தியில்லை, முதலிலே அவன்தானுமில்லையென்னும் குத்$_3$ருஷ்டிகளும், ஶூந்யவாதி$_3$களும். அவர்களுக்கு அங்குஶமாகையாவது – மத்தக$_3$ஜத்தின் தலையிலே அங்குஶத்தை நாட்டி மத$_3$த்தை நிரஸித்து, அத்தை ஸ்வவஶமாக்கிக் கொள்வாரைப்போலே ஈஶ்வரன் இவரையிட்டு குமதிகளுடைய து$_3$ர்மத$_3$ (து$_3$ர்மத) த்தைப்போக்கி அவர்களை ஸ்வவஶமாக்கிக் கொள்ளுகைக்கு ஸாத$_4$நமாயிருக்கை. இவர் தாம் ''உயர்வறவுயர்நலம்'' (திருவாய் 1–1–1) என்று தொடங்கி கு$_3$ணவிக்$_3$ரஹ விபூ$_4$திவிஶிஷ்டஈஶ்வரனை அவன் மயர்வற மதிநலம் அருளக்கண்டு அநுப$_4$வித்து, பிறர்க்கும் உபதே$_3$ஶித்து ஊரும் நாடும் உலகமும்

தன்னைப் போலாக்கினாரிறே. ஆகையால் அங்குஶமென்னக் குறையில்லை.

அன்றிக்கே, பரனுண்டு – ஈஶ்வரன், அவனுக்கு அங்குஶமானவரென்னுமாம். அப்போதைக்கு அங்குஶமாவது – ஆனையின் தலைமேலே தானிருந்து தன் நுதியாலே அத்தை வஶீகரிக்குமாப்போலே இவரும் தம்முடைய ஜ்ஞாநப$_4$க்திவைராக்$_3$யங்களாலே ஈஶ்வரனை தலைதுலுக்கும்படிப்பண்ணி ''எமர்கீழ்மேலெழுபிறப்பும் கேசவன்தமர்'' (திருவாய் 2–7–1) என்று தம்வாயாலே சொல்லவல்லராம்படி பண்ணி வஶீகரித்தாரொருவர் என்கிறது. ஆக, ஈஶ்வரசேதநரிருவரையும் வஶீகரித்த ஆழ்வாருடைய; ஈஶ்வரசேதநரிருவரையும் வஶீகரித்து, ஒன்றோடொன்றைச் சேரவிடுமவனிறே ஆசார்யன். இவர்தாம் பரமாசார்யரிறே.

(பாத$_3$ப$_4$க்தம்) திருவடிகள்விஷயமான ப$_4$க்தியே தமக்கு நிரூபகமாயிருக்குமவராய்; இத்தால் பரமாசார்யரான ஆழ்வாருக்கு ப$_4$க$_3$வத்ப்ரேமம் நிரூபகமானாப்போலே எம்பெருமானாருக்கு ஆழ்வார்திருவடிகளில் ப$_4$க்தியாய்த்து நிரூபகமென்கிறது. ''ப$_4$க்தம்'' என்று ஸாமாந்யமாகச் சொல்லுகையாலே ஈஶ்வரவிஷயத்தில் ஆழ்வாருக்குண்டான பரப$_4$க்தி, பரஜ்ஞாந, பரமப$_4$க்தி ரூபாவஸ்த$_2$ாத்ரயவிஶிஷ்டையான ப$_4$க்தி இவர்தமக்கு ஆழ்வார் விஷயத்திலுண்டென்கிறது. இவர்தாம் மாறனடிபணிந்துய்ந்தவரிறே. ஆக, பூர்வார்த்த$_4$த்தாலே ''ஆசார்யஸ்ய ஜ்ஞாநவத்தாமநுமாய'' (ஶ்ரீப$_4$ாஷ்யம்) என்றும் ''ஞானமனுட்டான மிவை நன்றாகவேயுடையனான குருவையடைந்தக்கால்'' (உப.ரத். 61) என்றும் சொல்லுகிறபடியே ஸஹேதுகமாக இவருடைய ஜ்ஞாநபூர்த்தியையும் அதினுடைய ஸம்ப்ரதாயபரம்பராப்ராப்தியையும் அருளிச்செய்தாராய்த்து. ஸ்வாஶ்ரிதவிஷயத்தில் இவர் செய்யும் உபகாரத்தைச் சொல்லுகிறது மேல் (காமாதீ$_3$த்யாதி$_3$யால்). காமமாவது – அபேக்ஷாத்மகஜ்ஞாநம். அதாவது – விஷயாந்தரஸ்ப்ருஹை. அத்தை ஆதி$_3$யாக உடைத்தான தே$_3$ாஷங்களுண்டு – க்ரோத$_4$லோப$_4$மோஹமத$_3$மாத்ஸர்யங்கள். அவைகளைப் போக்குமவராயென்னுதல். காமத்தை ஸ்வகாரணமாக உடைத்தான தே$_3$ாஷங்களுண்டு– க்ரோத$_4$லோப$_4$ாதி$_3$கள், அவற்றை போக்குமவராயென்னுதல். காமமடியாகவிறே க்ரோத$_4$லோப$_4$ாதி$_3$கள் உண்டாவது, அவற்றுக்கடியான காமத்தைப்போக்கவே அவை தன்னடையே போக்கினவையாமிறே.

காமம் உபலக்ஷணமாய், அத்தாலே அரிஷட்$_3$வர்க்க$_3$த்தைச்சொல்லி, ஆதி$_3$ தே$_3$ாஷபத$_3$ங்களாலே அதுக்கு ஹேதுவான அஹங்காரத்தைச்சொல்லி ஹரமென்று அத்தைப் போக்குமவராயென்னுதல். இவையெல்லாவற்றாலும் அஹங்கார மமகார நிவர்த்தகரென்கிறது. கீழ் ''நித்யஸேவா'' என்று ப$_4$க$_3$வத் கைங்கர்யத்தைச் சொல்லி, ''பராங்குஶபாத$_3$ப$_4$க்தம்'' என்று – அதின் வ்ருத்$_3$தி$_4$ரூபமான ததீ$_3$ய கைங்கர்யத்தைச் சொல்லி, இங்கு ''காமாதி$_3$தே$_3$ாஷஹரம்'' என்று தத்ப்ரதிப$_3$ந்த$_4$க நிவாரகரென்கையாலே கீழ்ச்சொன்ன ததீ$_3$யபர்யந்தமான ப$_4$க$_3$வத்கைங்கர்யத்துக்கு இவரே ப்ராபகரென்கிறது.

*இப்படிச்செய்கிறது தான் ஆருக்கென்னில் (ஆத்மபத$_3$ாஶ்ரிதாநாம்) தம் திருவடிகளை ஆஶ்ரயித்தவர்களுக்கென்கிறார். 'பத$_3$ாஶ்ரிதாநாம்' என்று திருவடிகள் ஸம்ப$_3$ந்த$_4$த்தையே நிரூபகமாகச்சொல்லுகையாலே வர்ணாஶ்ரமாதி$_3$ நியதிகளில்லை என்கிறது. இத்தால் ப்ரத$_2$மபர்வமோபாதி சரமபர்வமும் ஸர்வாதி$_4$காரமென்கிறது. ஆத்மபத$_3$– தம்திருவடிகளை. ஆஶ்ரிதாநாம் – மாதாபிதேத்யாதி$_3$ப்படியே ஸர்வப்ரகாரப்ராப்யமாகப் பற்றினவர்களுக்கு ''ந தே$_3$வ லோகாக்ரமணம்'' (ரா.அ.31–5) இத்யாதி$_3$ப்படியே தத்$_3$ விருத்$_3$த$_4$மான காமாதி$_3$ தே$_3$ாஷங்களுக்கு நிவாரகரென்னுமாம். அப்போது ஸேவையும் ப$_4$க்தியும் இவருக்கு நிரூபகங்கள். இத்தால் இவர் தாமே உபாயமும் உபேயமுமென்கிறது.*

*இவ்விடத்தில் எம்பெருமானார் ஸம்ப$_3$ந்த$_4$மாகிறது – எம்பெருமானாருடைய ஸாக்ஷாத்ஸம்ப$_3$ந்த$_4$மும், அவராலே ஆசார்யபத$_3$த்திலே நியுக்தரான எழுபத்துநாலு ஸிம்ஹாஸநஸ்த$_2$ருடைய ஸம்ப$_3$ந்தி$_4$பரம்பரையிலே தானும் ஒருவனாகை. இத்தாலே நியுக்தருடைய ஸம்ப$_3$ந்தி$_4$ பரம்பராஸம்ப$_3$ந்த$_4$மும் கார்யகரமென்கிறது.*

*இவர் தமக்கு வாசகமான திருநாமமேதென்ன, (ராமாநுஜம்) க்ருஷ்ணாவதாரத்துக்கு அல்லாத திருநாமங்களும் கிடக்க கோ$_3$விந்த$_3$ன் என்கிற திருநாமம் ''கோ$_3$விந்தே$_3$தி யத$_2$ாக்ரந்த$_3$த் க்ருஷ்ண மாம் தூ$_3$ரவாஸிநம்'' (ப$_4$ார.உத்$_3$.58–22) என்கிறபடியே ப்ரத$_4$ாநமானாப்போலே ''ந சேத்$_3$ ராமாநுஜேத்யேஷா'' (ஸ்ரீவரவரமுநிவிஷயக முக்தகம் 5) என்னும்படி இவ்வவதாரத்துக்கு ப்ரத$_4$ாநமாய்க்காணும் ராமாநுஜனென்கிற திருநாமமிருப்பது.*

*(யதிபதிம்) ஜிதேந்த்$_3$ரியரில் தலைவரான எம்பெருமானாரை. ஜிதேந்த்$_3$ரியராவார் – சக்ஷுராதி$_3$ இந்த்$_3$ரியங்களை ரூபாதி$_3$விஷயங்களில் நின்றும் மீட்டு ப$_4$க$_3$வத்$_3$ விஷயத்திலே சேர்க்குமவர்கள். அவர்களில் தலைவராகையாவது – ஸர்வேந்த்$_3$ரியாப்யாயகமான ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வமே தமக்கு புருஷார்த்த$_2$மென்றிருக்கையன்றிக்கே, அநுப$_4$வஜநித-ப்ரீதிகாரித கைங்கர்யத்தாலுண்டான அத்தலையில் முக$_2$விகாஸமே தனக்குப் புருஷார்த்த$_2$மென்றிருக்கை.*

*(யதிபதிம்) ஆஶ்ரிதப்ரயத்நஸாபேக்ஷரன்றிக்கே தாமே மேல்விழுந்து ரக்ஷிக்கும் ஸ்வப$_4$ாவரான எம்பெருமானாரை என்னுமாம். (ராமாநுஜம் யதிபதிம்) ''மாற்பால் மனம்சுழிப்ப மங்கையர் தோள்கைவிட்டு'' (மூன்று. திருவ. 14) என்கிறபடியே ஸர்வாங்க$_3$ஸுந்த$_3$ரரான பெருமாளிடத்திலே திருவுள்ளத்தை வைத்து திருவவதரித்தவராகையாலே இதரவிஷயவிரக்தரான எம்பெருமானாரை என்னுமாம்.*

*''த்வயி கிஞ்சித்ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம'' (ரா.யுத்$_3$.41–4) ''அபி$_4$ஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்$_3$ரம் விபீ$_4$ஷணம்। க்ருதக்ருத்யஸ்தத$_3$ா ராமோ விஜ்வர: ப்ரமுமோத$_3$ ஹ॥ (ரா.ப$_3$ா.1–85) என்று அவன் ஸ்வார்த்த$_2$நிரபேக்ஷனாய் பரார்த்தை$_2$கபரனாயிருக்குமாப்போலேயாய்த்து அவனை அநுஸரித்து திருவவதரித்த இவர் ஸ்வார்த்த$_2$நிரபேக்ஷராய் பரார்த்தை$_2$கபரராயிருக்கும்படி யென்னவுமாம்.*

அன்றிக்கே, இவர் ஆஶ்ரிதர்க்கு இஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹாரங்களைச் செய்யும்படி எங்ஙனேயென்ன (ராமாநுஜம்) அதுவோ திருநாமத்தாலே அறியலா மென்கிறார். ''ராமாம் அநுஸ்ருத்ய ஜாத: ராமாநுஜ:'' என்று வ்யுத்பத்தியாய் அத்தால் நாரீணும் உத்தமையான பிராட்டியை அநுஸரித்து திருவவதரித்தவராகை யாலே பிராட்டி ராவணனுக்கு ஹிதம் சொல்லியும், ஏகாக்ஷீ ஏககர்ணீ முதலான எழுநூறு ராக்ஷஸிகளுக்கு தம் க்ருபையாலே தானே ''ப$_4$வேயம் ஶரணம் ஹி வ:'' (ரா.ஸு.58–93) என்றாப்போலே இவரும் ஸம்ஸாரிகள் படும் அலமாப்புக் கண்டு பொறுக்க மாட்டாதே, தாமே மேல்விழுந்து இவர்களுக்கு ஹிதம் செய்வது தம் கார்யத்துக்காகவன்றிக்கே அவர்கள் உஜ்ஜீவிக்கையே ப்ரயோஜநமாகவென்கை.

(ராமாநுஜம் யதிபதிம்) 'இராமானுசனென்னும் மாமுனியே'' (இரா.நூ. 16) என்கிறபடியே ராமானுசனென்னும் திருநாமமுடைய எம்பெருமானாரை. (யதிபதிம்) ஸ்வாநுஷ்டா$_2$நத்தாலே ஸ்வாஶ்ரிதரக்ஷகரான எம்பெருமானாரை யென்னுமாம். கீழ் ''பாத$_3$ப$_4$க்தம்'' என்று சொல்லிவைத்து இங்கு ''யதிபதிம்'' என்கையாலே இவருடைய ஜ்ஞாநப$_4$க்திவைராக்$_3$யங்கள் சொல்லப்பட்டன.

(ப்ரணமாமி மூர்த்$_4$நா) கீழ்ச்சொன்னபடியே இவர் செய்த மஹோபகாரங் களைக் கண்டு பெருமாள்விஷயத்தில் பிராட்டி ''ஶிரஸா சாபி$_4$வாத$_3$ய'' (ரா.ஸு.38–54) என்றாப் போலே தாமும் இவ்விஷயத்தில் தலையால் வணங்குகிறார். (மூர்த்$_4$நா ப்ரணமாமி) க்ருதஜ்ஞதாதிஶயமிருந்தபடி யென்தான்; நினைவும் சொல்லும் பிற்படும்படி காயங்காணும் முற்பட்டது.

அன்றிக்கே, ''மூர்த்$_4$நா'' என்று காயிகத்தை முந்துறச்சொல்லி மேல் ''ப்ரணமாமி'' என்றதுக்கு பூர்வப$_4$ாவியான வாசிகத்தைச்சொல்லி, உபலக்ஷணதயா இரண்டுக்குமடியான மாநஸிகத்தைச் சொல்லவுமாம். ஆக கரணத்ரயத்தாலும் ஸேவிக்கிறாரென்னவுமாம்.

அன்றிக்கே, 'தத்$_3$விஜ்ஞாநார்த்த$_2$ம் ஸ கு$_3$ருமேவாபி$_4$க$_3$ச்சே$_2$த்'' (முண்ட$_3$க 1–2–12) என்றும், ''அத்தா நீ செய்தன அடியேன் அறியேனே'' (திருவாய் 2–3–2) என்றும் சொல்லுகிறபடியே ஶிஷ்யனுக்கு ஜ்ஞாநலாப$_4$ம் ஆசார்யனாலேயாகை யாலே தத$_3$ர்த்த$_2$மாக அவர் தம்மையே ஶரணமாகப்பற்றுகிறார் என்னவுமாம்.

''நமாமி'' என்று – ''ந நமேயம்'' (ரா.யு.36–11)என்று இருக்கும்படி பண்ணுகிற அஹங்கார நிவ்ருத்தியைச்சொல்லி, ''ப்ர'' என்கிற உபஸர்க்க$_3$த்தாலே அதினுடைய நிஶ்ஶேஷ நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. இத்தால் ஆத்ம ரக்ஷணத்தில் தனக்கொரு அந்வயமின்றிக்கே, அவனிட்டவழக்காயிருக்குமிருப் பைச் சொல்லுகிறது.

ஶிஷ்யலாப$_4$ம் ஆசார்யனுக்குப் புருஷார்த்த$_2$மிறே. ''ஆத்மலாப$_4$ாத் பரம் கிஞ்சித் அந்யந்நாஸ்தீதி நிஶ்சயாத்। அங்கீ$_3$கர்த்துமிவப்ராப்தம் அகிஞ்சநமிமம் ஜநம்॥'' (பூர்வதி$_3$நசர்யா 11) என்று ஸ்வாங்கீ$_3$காரத்தை அத்தலைக்குப் புருஷார்த்த$_2$ மாகவிறே அப்பா அருளிச்செய்தது. (யதிபதிம் மூர்த்$_4$நா ப்ரணமாமி) அவர்

மேன்மைக்கு எல்லைநிலமானவோபாதி இவர் தாழ்மைக்கு எல்லைநிலமாகிருர். அவர் மாறனடி பணிந்துய்ந்தவர். இவர் யதீந்த்ரப்ரவணர். இத்தால் ஆசார்யாபிவாத$_{3}$நரூப மங்க$_{3}$ளத்தைச் செய்தருளுகிருர். (1)

श्रीरङ्गराजचरणाम्बुजराजहंसं श्रीमत्पराङ्कुशपदाम्बुजभृङ्गराजम् ।
श्रीभट्टनाथपरकालमुखाब्जमित्रं श्रीवत्सचिह्नशरणं यतिराजमीडे ।। (२)

**ஸ்ரீரங்க$_{3}$ராஜசரணும்பு$_{3}$ஜராஜஹம்ஸம்**
**ஸ்ரீமத்பராங்குஶபத$_{3}$ம்பு$_{3}$ஜப்$_{4}$ருங்க$_{3}$ராஜம்।**
**ஸ்ரீப$_{4}$ட்டநாத$_{2}$பரகாலமுக$_{2}$ப்$_{3}$ஜமித்ரம்**
**ஸ்ரீவத்ஸசிஹ்நஶரணம் யதிராஜமீடே$_{3}$॥ (2)**

**அவ.**– ''உப$_{4}$ப்$_{4}$யாமேவ பக்ஷாப்$_{4}$யாம் ஆகாஶே பக்ஷிணும் க$_{3}$தி:।
ததை$_{2}$வ ஜ்ஞாநகர்மப்$_{4}$யாம் ப்ராப்யதே புருஷோத்தம:॥''

(நார.பு. 61–11) என்கிறபடியே ஜ்ஞாநாநுஷ்ட$_{2}$ாநங்களிரண்டும் ப$_{4}$க$_{3}$வத்ப்ராப்தி ஸாத$_{4}$நமாக ஶாஸ்த்ரவிஹிதமாகையாலே கீழ் ஶ்லோகத்தில் இவருடைய ஜ்ஞாநபூர்த்தியைச் சொல்லி, இஶ்லோகத்தில் தத$_{3}$நுகு$_{3}$ணமான அநுஷ்ட$_{2}$ாந பூர்த்தியை அருளிச்செய்கிருர் ஸ்ரீரங்கே$_{3}$த்யாதி$_{3}$யால்.

**வ்யா.**– ஈஶ்வரனே உபாயம் என்றிருக்குமிவர்க்கு ஜ்ஞாநாநுஷ்ட$_{2}$ாநங்களைக் கொண்டு ப்ரயோஜநம் என்னென்னில் இவருக்கு இவற்ருல் வருவதொரு ப்ரயோஜநமில்லையேயாகிலும், இவைதான் ஸ்வரூபாநுப$_{3}$ந்தி$_{4}$களாகையாலே விடவரிதாயிருக்கும். ஸ்வரூபாநுப$_{3}$ந்தி$_{4}$களாய்த்தது கைங்கர்யரூபங்களாகை யாலே. ''ரஜ்யதே அநேநேதி ரங்க$_{3}$ம்'' ''ரஜ்யதே அஸ்மிந் இதி ரங்க$_{3}$ம்'' என்கிற வ்யுத்பத்தி த்$_{3}$வயத்தாலும் பெரியபெருமாளுக்கு ஸர்வசேதநரும் தன்னையாஶ்ரயிக் கையால் வந்த ப்ரீதிக்குக் காரணமாகையால் அவர்தமக்கே ப்ரீதிவிஷயமான தே$_{3}$ஶமென்கிறது.

அதுக்குமேலே ஸ்ரீமத்த்வமாகிறது ''தே$_{3}$ஶாந்தரக$_{3}$தோ வாऽபி த்$_{3}$வீபாந்தர– க$_{3}$தோऽபி வா। ஸ்ரீரங்க$_{3}$பி$_{4}$முகே$_{2}$ பூ$_{4}$த்வா ப்ரணிபத்ய ந ஸீத$_{3}$தி॥ ரங்க$_{3}$ம் ரங்க$_{3}$மிதி ப்$_{3}$ரூயாத் க்ஷுத்$_{4}$ப்ரஸக$_{2}$லநாதி$_{3}$ஷு। ப்$_{3}$ரஹ்மலோகமவாப்நோதி ஸத்$_{3}$ய: பாபக்ஷயாந் நர:॥'' இத்யாதி$_{3}$யில் சொல்லுகிறபடியே தனக்குண்டான ப$_{4}$க$_{3}$வத$_{3}$ங்கீ$_{3}$கார ப$_{3}$லத்தாலே தானிந்த தி$_{3}$க்கை நோக்கி த$_{3}$ண்ட$_{3}$ம் ஸமர்ப்பித்தல், பேரைச்சொல்லுதல் செய்வாரென்ன, அவ்வளவாலே அவர்களுக்குண்டான ஸமஸ்த து$_{3}$ரிதங்களையும் போக்கி அபி$_{4}$மதப$_{2}$லவிஶேஷத்தைக் கொடுக்கைக்கீடான ஶக்தி விஶேஷமாதல், ''ஆத்$_{3}$யம் ஸ்வயம் வ்யக்தமித$_{3}$ம் விமாநம் ரங்க$_{3}$ஸம்ஜ்ஞிகம்'' (அஷ்டோத்தர ஶத) என்கிறபடியே ஸ்வயம் வ்யக்த தி$_{3}$வ்ய தே$_{3}$ஶங்களில் ப்ராத$_{4}$ந்யமாதல்.

ஸ்ரீஶப்$_{3}$த$_{3}$ம் பூஜ்யவாசியாகையாலே ப$_{4}$க$_{3}$வத்ஸம்ப$_{3}$ந்த$_{4}$த்தாலுண்டான பூஜ்யதையைச் சொல்லவுமாம். ப்ராப்யதையைச் சொல்லவுமாம். அன்றிக்கே 'ஶ்ரியா ரங்கம் – ஶ்ரீரங்கம்' என்று வ்யுத்பத்தியாய் அத்தாலே ''ஔத$_{3}$ார்ய

*காருணிகதாஶ்ரிதவத்ஸலத்வபூர்வேஷு ஸர்வம் அதிஶாயிதம் அத்ர மாத:'' (ஶ்ரீகு$_3$ணரத்நகோஶம்–57) என்கிறபடியே பெரியபிராட்டியாருடைய ஔதா$_3$ர்யாதி$_3$கு$_3$ணங்களுக்கு ப்ரகாஶகமான தே$_3$ஶமென்னவுமாம்.*

*(ராஜ) அத்தே$_3$ஶத்துக்கு நிர்வாஹகனாகையாலே வந்த ஔஜ்ஜ்வல்யத்தை யுடையவன் என்னுதல்; தன்னுடைய ஸௌலப்$_4$யாதி$_3$கு$_3$ணங்களுக்கு ப்ரகாஶக மான தே$_3$ஶத்தைப் பெறுகையாலே வந்த ஔஜ்ஜ்வல்யத்தையுடையவன் என்னுதல். பெரியபிராட்டியார் தனக்குத் தன்னைக் கொடுக்கைக்குப் பாங்கான தே$_3$ஶத்தைப் பெறுகையால் வந்த ஔஜ்ஜ்வல்யத்தை உடையவன் என்னுதல்.*

*(ஶ்ரீரங்க$_3$ராஜ) உப$_4$யவிபூ$_4$த்யைஶ்வர்யத்தைக் காட்டில் இவ்வைஶ்வர்யம் இவனுக்கு விலக்ஷணமாய்க்காணுமிருப்பதென்கிறார். (ஶ்ரீரங்க$_3$ராஜ) அவன் ஒன்றை அபி$_4$மானிப்பது அது தனக்கு நிரூபகமாகவிறே அபி$_4$மானிப்பது. (சரணாம்பு$_3$ஜ) பெரியபெருமாளுடைய திருவடித்தாமரைகளுக்கு உபமாநம் நேர்நில்லாமையாலே உபமேயந்தன்னையே உபமாநமாகச் சொல்லுகிறது.*

*(ராஜஹம்ஸம்) அத்திருவடித்தாமரைகளில் விஹரிக்கும் ராஜஹம்ஸம் காணும் இவரென்கிறார். அதாவது – ராஜஹம்ஸத்துக்குத் தாமரை விஹாரஸ்த$_2$ாந மாகிறாப் போலே இவருக்கு பெரியபெருமாள்திருவடிகள் விஹாரஸ்த$_2$ாந மானபடியும் என்கை. ''ரமந்தே யோகி$_3$நோऽநந்தே ஸத்யாநந்தே$_3$ சித$_3$ாத்மநி'' என்னக்கடவதிறே. ஆகையாலே ''அத்ரைவ ஶ்ரீரங்கே$_3$ ஸுக$_2$மாஸ்வ'' (ஶரணாக$_3$தி க$_3$த்$_3$யம்) என்று பெரியபெருமாள் அநுக்$_3$ரஹித்ததும். அன்றிக்கே, தாமரைக்கு ராஜஹம்ஸம் ப்ரகாஶகமானாப்போலே இவரும் திருவடிகளுக்கு ப்ரகாஶகரென் னவுமாம். ஶேஷஶேஷிகள் ஒருவருக்கொருவர் ப்ரகாஶகரிறே.*

*அன்றிக்கே, ''கபர்தி$_3$மதகர்த$_3$மம்'' (யதிராஜஸப்ததி–38) இத்யாதி$_3$யிற் சொல்லுகிறபடியே ப$_4$க$_3$வத்-தத்த்வத்துக்கு ப$_3$ாஹ்யகுத்$_3$ருஷ்டிகளாலுண்டான அப்ரகாஶதையைப் போக்கி அந்த தத்த்வத்தை ஶ்ரீப$_4$ாஷ்யாதி$_3$க்$_3$ரந்த$_2$ங்களாலே ப்ரகாஶிப்பிக்குமவரென்னவுமாம். ப$_4$க$_3$வத்-தத்த்வம் ஸ்வயம்ப்ரகாஶமாயன்றோ இருப்பது. அதற்கு இவர் ப்ரகாஶகராவதென்னென்னில்? அது ஸ்வயம்ப்ரகாஶமே யாகிலும் தத்$_3$விஷய ஜ்ஞாநமில்லாதார்க்கு அப்ரகாஶமாயன்றோ இருப்பது. அவர்களுக்கு தத்$_3$விஷய ஜ்ஞாநத்தையுண்டாக்கி அத்தை ப்ரகாஶமாம்படிப் பண்ணுகை. ஆகையால் இவர் ஈஶ்வரசேதநரிருவருக்கும் உபகாரகரென்கிறது. இவ்வுபகாரம் ஶேஷிமுக$_2$விகாஸ ஜநகமாகையாலே ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்த$_2$மாயிருக்கும்.*

*கீழ், இவருக்குண்டான ப$_4$க$_3$வத$_3$ங்கீ$_3$காரத்துக்கு நித$_3$ாநத்தைச் சொல்லுகிறது மேல் (ஶ்ரீமதித்யாதி$_3$) இவர்க்கு ஶ்ரீமத்த்வமாவது – ''சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே தந்தை தாயென்றடைந்த வண்குருகூரவர் சடகோபன்'' (திருவாய் 6–5–11) என்கிறபடியே ஈஶ்வரனையே ஸர்வவித$_4$ ப$_3$ந்து$_4$வாகப் பற்றின சீர்மையாதல், உண்ணும் சோற்றிற்படியே அவன் தன்னையே*

த$_4$ாரக போஷகபே$_4$ாக்$_3$யங்களாகப் பற்றின சீர்மையாதல், ஒழிவில்காலப்படியே ஸர்வதே$_3$ஶஸர்வகாலஸர்வாவஸ்தை$_2$களிலும் ஸமஸ்தவித$_4$கைங்கர்யங்களையும் தாமொருவருமே செய்யவேணுமென்கிற மநோரத$_2$மாதல். அன்றிக்கே, ''ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல்'' (திருவாய் 6–7–2) என்கிறபடியே தம்படி ஸ்வஸம்ப$_3$ந்தி$_4$பரம்பரைக்குமுண்டாம்படி பண்ணுகையாதல்.

(பராங்குஶ) இப்படிகளாலே ப$_3$ாஹ்யகுத்$_3$ருஷ்டிகளை வஶீகரிக்கவல்லரான ஆழ்வாருடைய. (பத$_3$ாம்பு$_3$ஜப்$_4$ருங்க$_3$ராஜம்) அத்திருவடித்தாமரைகளின் மது$_4$வை பு$_4$ஜித்து மது$_4$பாநமத்தமாய்ச்சுழன்றுதிரிந்து விளங்குகின்ற ப்$_4$ருங்க$_3$ஶ்ரேஷ்டரான. இத்தால் ப்$_4$ரமரமானது தாமரையின் மது$_4$வை உண்டு தன்குறைதீர்ந்தற்றதன்றிக்கே, மது$_4$பாநமத்தமாய்ச்சுழன்று திரியுமாப்போலே இவர் மாறன் அடிபணிந்து கவியமுதுண்டு களித்து குமதிக்ருதிகளை மதியாதே பூ$_4$மண்டலமெங்கும் விஜயயாத்ரையாய் ஸஞ்சரிக்குமவரென்கிறது.

ப்$_4$ருங்க$_3$த்துக்கு மது$_4$ஜீவநமானுப்போலவும், ராஜஹம்ஸத்துக்கு தாமரை விஹாரஸ்த$_2$ாநமானுப்போலவும் இவருக்கு ஆழ்வார் திருவடிகள் த$_4$ாரகமாயும் பெரியபெருமாள் திருவடிகள் விஹாரஸ்த$_2$ாநமாயும் இருக்குமென்கிறது. ''ஆசார்யவாந் புருஷோ வேத$_3$'' (ச$_2$ாந்தே$_3$ா 6–14–2) என்கிறபடியே ஆசார்யாதீ$_4$நமிறே உஜ்ஜீவநம்; ஶிஷ்யன் ப்ரத$_2$மபர்வத்தில் இழிகிறதும் அவனுகந்தவிஷயமென்றுய்த்து.

இனிஇவர் ததீ$_3$யவிஷயத்தில் கிஞ்சித்கரிக்கிறபடியைச் சொல்லுகிறது மேல் (ஶ்ரீப$_4$ட்டநாதே$_2$த்யாதி$_3$). ஶ்ரீஶப்$_3$த$_3$ம் பூஜ்யதையைச் சொல்லுகிறதாதல்; ஶ்ரீமத்த்வத்தைச் சொல்லுகிறதாதல். இவர்களுக்கு ஶ்ரீமத்த்வமாவது – ஶ்ரீமாலாகாரரைப் போலே திருநந்த$_3$வநம் செய்து திருமாலை ஸமர்ப்பிக்கையும், பரமதநிரஸந பூர்வகமாக ஶ்ரீமந்நாராயணனுகிற தத்த்வத்தை ஸ்த$_2$ாபித்து அவன் தன்னை ஸாக்ஷாத்கரித்து தம்மைப்பேணுதே அத்தலைக்கு மங்க$_3$ளாஶாஸநமே பண்ணுகையும், கே$_3$ாபுர ப்ராகாரநிர்மாணம் முதலான கைங்கர்யகரணங்களும், ப்ராப்யத்வமாதல். ஆக இப்படி ஶ்ரீமான்களாயிருந்துள்ள (ப$_4$ட்டநாத$_2$) ப்$_3$ராஹ்மணஶ்ரேஷ்ட$_2$ரான பெரியாழ்வாரென்ன, இவர்க்கு ப்$_3$ராஹ்மணரில் ஶ்ரைஷ்ட்$_2$யமாவது – மந்த்$_3$ரப்$_3$ரஹ்மமான திருமந்த்ரத்தில் ப்ரத$_2$மபத$_3$த்தாலே சொல்லப்படுகிற ஸ்வரூபாநுரூபமான மங்க$_3$ளாஶாஸநமும், அஸ்த$_2$ாநே ப$_4$யஶங்கையும் மேன்மேலும் மங்க$_3$ளாஶாஸநமும். (பரகால) ஶத்ரும்ருத்யுவான திருமங்கையாழ்வாரென்ன. இவருக்கு ஶத்ருக்கள் –ப$_4$க$_3$வத்$_3$த்$_3$விட்டுக்கள். அவர்களாகிறுர் – 'ஆத்மைக்யம்' இத்யாதி$_3$யிற் சொல்லுகிறபடியே ஆத்மைக்ய வாதி$_3$கள் முதலானவர்கள்; இவர்களுடைய.

(முக$_3$ாப்$_3$ஜ) திருமுக$_2$மண்ட$_3$லங்களாகிற தாமரைகளுக்கு. முக$_2$த்தைத் தாமரையாகச் சொல்லுகிறது – தாமரையுடைய ஸௌகுமார்யம் ஸ்பர்ஶ ஸஹமன்றிக்கே இருக்குமாப்போலே திருமுக$_2$மண்ட$_3$லமும் பரது$_3$:க்க$_2$ம் பொறுக்கமாட்டாத ஸௌகுமார்யத்தையுடையதென்கிறது. (மித்ரம்)

*ஸூர்யனுயிருக்குமவராய். அதாவது ஆதி$_3$த்யன் ஸ்வோத$_3$யத்தாலே தாமரையை அலர்த்துமாப்போலே இவரும் பரமதப்ரதிக்ஷேபாத்$_3$யநேகவித$_4$கைங்கர்யங் களாலே இவர்களுக்கு அபி$_4$மதமான பெரியபெருமாளை உகப்பிக்கை.*

*அன்றிக்கே முக$_2$ஶப்$_3$த$_3$ம் – ஆதி$_3$ ஶப்$_3$த$_3$பர்யாயமாய் பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் முதலான ஆழ்வார்களாகிற தாமரைகளுக்கு மித்ரரானவராய் யென்னவுமாம். அப்போதைக்கு அவர்களுகந்தவிஷயமென்று பெரியபெருமாள் திருவடிகளில் அநந்தகைங்கர்யங்களையும் செய்தருளுகையாலே அவர்கள் திருமுக$_2$மண்ட$_3$லத்துக்கு விகாஸகரென்கிறது. ஆக கீழ்ஶ்லோகத்தில் பூர்வார்த்த$_4$த் தாலே சொல்லப்படுகிற இவருடைய ததீ$_3$யஶேஷத்வபர்யந்தமான தச்சே$_2$ஷத்வ ஜ்ஞாநத்துக்கு அநுகு$_3$ணமான பர்வத்ரயகிஞ்சித்காரம் சொல்லிற்முயிற்று.*

*இனி ஆஶ்ரிதவிஷயத்தில் இவரிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. (ஸ்ரீவத்ஸசிந்ஹஶரணம்) ஸ்ரீவத்ஸசிந்ஹாம்ஶபூ$_4$தராகையாலே ஸ்ரீவத்ஸசிந்ஹ ரென்கிற திருநாமமுடைய கூரத்தாழ்வானுக்கு ''ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்$_3$யே'' (ஸ்ரீவை.ஸ்த–1) என்று அவர் தம் வாயாலே சொல்லலாம்படி உபாயபூ$_4$தராய். ஆழ்வானிறே ''ந சேத்$_3$ ராமாநுஜேத்யேஷா சதுரா சதுரக்ஷரீ'' (ஸ்ரீவரவரமுநி விஷயக முக்தகம் 5) என்று வ்யதிரேகத்தாலும், ''ராமாநுஜாங்க்$_4$ரி ஶரணோ஽ஸ்மி'' (வரத$_3$.ஸ்த. 102) என்று அந்வயத்தாலும் இவருடைய உபாயத்வத்தை அருளிச்செய்தார். ஆகையாலே ''ஸ்ரீவத்ஸசிந்ஹஶரணம்'' என்கிறுர். இது எல்லார்க்கும் ஒக்குமாகையாலே உபலக்ஷணம். கீழ் ஶ்லோகத்தில் காமாதி$_3$தே$_3$ாஷஹரமாத்ம பத$_3$ாஶ்ரிதாநாம்'' என்கிறவிடத்தில் தாத்பர்யவித$_4$யா தோற்றுகிற உபாயத்வம் இங்கு ஸ்ரீவத்ஸசிந்ஹ ஶரணம் என்று ஶரணஶப்$_3$த$_3$த்தாலே வ்யாக்$_2$யாதம்.*

*(யதிராஜம்) கீழ்ச்சொன்ன ஆகாரங்களால் உண்டான ஸ்வோத்கர்ஷம் நெஞ்சில் தட்டாதபடியான வைராக்$_3$யமுடைய எம்பெருமானுரை. அன்றிக்கே, கீழ்ச்சொன்ன ஏற்றங்களுக்கெல்லாம் நித$_3$ாநமான வைராக்$_3$யமுடைய எம்பெருமா னுரை என்னுமாம். இவ்வைராக்$_3$யமிறே இவர்க்கு ப்ரகாஶஹேது. (ஈடே$_3$) வாகி$_3$ந்த்$_3$ரியம் படைத்த ப$_2$லம் பெற்றுரேமென்று ஸ்தோத்ரத்தில் ப்ரவ்ருத்தராகி ருர். (ஈடே$_3$)கீழ் மூர்த்$_4$நா ப்ரணமாமி என்று காயிகமான கைங்கர்யத்தைச் சொல்லி, இதில் ''ஈடே$_3$'' என்று வாசிகமான அடிமையைச் சொல்லுகிறது. அன்றிவ்வுல (திருப்பாவை 24)கிற்படியே கு$_3$ணஜிதர்க்கு ஸ்தோத்ரமிறே க்ருத்யமாவது.*

वाचा यतीन्द्र! मनसा वपुषा च युष्मत्पादारविन्दयुगलं भजतां गुरूणाम् ।
कूराधिनाथकुरुकेशमुखाद्यपुंसां पादानुचिन्तनपरस्सततं भवेयम् ।। (३)

**வாசா யதீந்த்$_3$ர! மநஸா வபுஷா ச யுஷ்மத்–**
**பாத$_3$ாரவிந்த$_3$யுக$_3$ளம் ப$_4$ஜதாம் கு$_3$ரூணும்।**
**கூராதி$_4$நாத$_2$குருகேஶமுக$_2$ாத்$_3$யபும்ஸாம்**
**பாத$_3$ாநுசிந்தநபரஸ்ஸததம் ப$_4$வேயம்॥ (3)**

*நின்ருளும் பெரியவரே'' (இரா.நூ.86) என்கிறபடியே இவ்வாத்மவஸ்துவுக்கு ப்ராப்தஶேஷிகளான தேவரீர்ஸம்ப$_3$ந்தி$_4$கள் திறத்தில் கிடீர் செய்யப்பெற்ற தென்கிருர். அன்றிக்கே, அடியேனுக்கு ஸ்வவஞ்சநத்தால் பிறந்த ஹர்ஷத்தை அவர்கள் ஸ்வகோ$_3$ஷ்டியில் புகுருகையால் வந்ததென்னும்படி காணுமென்கிருராக வுமாம்.*

*(யதிராஜ) அடியேனுக்கு இந்த்$_3$ரியநிக்$_3$ரஹத்திலே ருசியையுண்டாக்கி யன்ரே தேவரீர் யதிராஜராக வேண்டியதென்கிருர். ரஞ்ஜநாத்$_3$ ராஜாவிறே. (ப$_4$வதீ$_3$ய ஸங்கே$_4$ ஹ்ருஷ்டஶ்சராமி யதிராஜ) இந்த்$_3$ரியநியமநத்தால் புகர்பெறும் தேவரீருக்கு அடியேன் இந்த்$_3$ரியவஶ்யனுய் தேவரீர்ஸம்ப$_3$ந்தி$_4$களை வஞ்சித்துத் திரிவதேயென்கிருர்.*

*''அறிந்து வைத்து வஞ்சிப்பானென் என்ன (ததோ஽ஸ்மி மூர்க$_2$:) கீழ்ச்சொன்ன வையெல்லாம் ஸ்வரூபவிரோதி$_4$களென்றறிந்திருக்க ப$_4$யலேஶமுமின்றிக்கே அவற்றை விடமாட்டாமல் செய்கையாலே மூர்க்க$_2$னுகிறேன். (மூர்க்கே$_2$஽ஸ்மி) அடியேனுக்கு மௌர்க்$_2$யமாயிற்று ஸத்தையென்கிருர். கீழ் ''க்ருதிநோபி'' என்றும் ''ஶிஷ்டஜநௌக$_4$மத்$_4$யே'' என்றும் ஸாமாந்யேந சொன்னத்தை ''ப$_4$வதீ$_3$ய ஸங்கே$_4$'' என்று ஒருவிஶேஷத்திலே பர்யவஸிப்பிக்கிருர்.*

*இத்தாலே எம்பெருமானுர் ஸம்ப$_3$ந்தி$_4$களாய்த்து ஶாஸ்த்ரார்த்த$_2$வித்துக் களும் ததர்த்த$_2$ப்ராமாண்யவாதி$_3$களுமென்கிறது. (9)*

हा हन्त हन्त मनसा क्रियया च वाचा योऽहं चरामि सततं त्रिविधापचारान् ।
सोऽहं तवाप्रियकर: प्रियकृद्वदेव कालं नयामि यतिराज! ततोऽस्मि मूर्ख: ।।(१०)

***ஹா ஹந்த ஹந்த மநஸா க்ரியயா ச வாசா***
***யோ஽ஹம் சராமி ஸததம் த்ரிவித$_4$ாபசாராந்।***
***ஸோ஽ஹம் தவாப்ரியகர: ப்ரியக்ருத்$_3$வதே$_3$வ***
***காலம் நயாமி யதிராஜ! ததோ஽ஸ்மி மூர்க்க$_2$:।। (10)***

***அவ.–*** *தேவரீர்ஸம்ப$_3$ந்தி$_4$களை வஞ்சிக்கை மாத்ரமன்றிக்கே தேவரீர் தம்மையும் வஞ்சிக்கப்பெற்றேன் என்கிருர் (ஹா ஹந்த ஹந்தேத்யாதி$_3$யால்).*

***வ்யா.–*** *(ஹா ஹந்த ஹந்த) வீப்ஸையாலே விஷாத$_3$ாதிஶயம் தோற்றுகிறது. தாம் அத்தலையில் கரணத்ரயத்தாலும் பண்ணுகிற அபராத$_4$ங்களையும் வஞ்சநத்தை யும் பார்த்து அவற்றை விண்ணப்பம் செய்வதற்கு முன்பே து$_3$:க$_2$ம் இரட்டித்து ஐயோவென்கிருர். அபராத$_4$ங்களைச் செய்வது உபகாரகவிஷயத்திலேயாகையாலே பொறுக்கமாட்டிற்றிலர்.*

*(மநஸா க்ரியயா ச வாசா) சகாரம் ஸமுச்சயார்த்த$_2$கம். அதுதானும் ஒருகரணத்தாலன்றிக்கே கரணத்ரயத்தாலும் செய்யப்பெற்றேன். (மநஸா க்ரியயா ச) ப்ராமாதி$_3$கமாக அன்றிக்கே ஸங்கல்பபூர்வமாயாயிற்றுச் செய்வது. (வாசா) நினைத்தபோதே சொல்லில் அறிந்து பரிஹரிப்பார்களென்று நினைத்து, செய்த பின்பாயிற்று சொல்லுவது. (வாசா) அதுதானும் கூ$_3$ட$_4$மாயோ? பிறரறிந்ததும்*

என்வாயாலே காணும். (மநஸா க்ரியயா வாசா) ‘‘வாசா யதீந்த்$_3$ர மநஸா வபுஷா ச யுஷ்மத்பாத$_3$ாரவிந்த$_3$யுக$_3$ளம் ப$_4$ஜதாம்’’ என்கிறதுக்கு எதிர்த்தட்டாகக்கிடீர் அடியேன் செய்திருப்பது. (யோऽஹம்) ‘‘பாபிஷ்ட: க்ஷத்ரப$_3$ந்து$_4$ஶ்ச’’ () என்கிறபடியே பாபம் செய்கையிலே ப்ரஸித்$_3$த$_4$னை அடியேன். ‘‘யோ வஜ்ரபாத’’ (ரா.யு.59–140) இத்யாதி$_3$களாலே யச்ச$_2$ப்$_3$த$_3$ம் ப்ரஸித்$_3$த$_4$பராமர்ஶியிறே. (யோऽஹம்) இப்ரஸித்$_3$தி$_4$யையிட்டு நிரூபிக்கும்படி காணும் அடியேனிருப்பது. (சராமி) அநுதாபம் பிறந்து க்லேஶிக்கிற த$_3$ஶையிலும் அபராத$_4$ங்களை செய்கையைத் தவிர்கிறிலேன். (ஸததம்) தந்தாம் ப்ரஸித்$_3$தி$_4$யை ஒருநாளும் கைவிடார்களிறே.

அபராத$_4$ங்கள் தான் எவையென்ன (த்ரிவித$_4$ாபசாராந்) மூன்று வகைப்பட்டிருந்துள்ள அபசாரங்களாய்க்காணும் அபராத$_4$ங்களிருப்பதென்கிறார். அவையாவன – ப$_4$க$_3$வத$_3$பசாரமும், ப$_4$ாக$_3$வதாபசாரமும், அஸஹ்யாபசாரமுமென்று; நிஷித்$_3$த$_4$ங்களை நாலுவித$_4$மாகச் சொல்லாநிற்க இங்கு அபசாரங்களை மாத்ரம் சொல்லுகிறது. விதி$_4$நிஷேத$_4$ங்களிரண்டும் ப$_4$க$_3$வதாஜ்ஞாரூபங்களாகையாலே தத$_3$திக்ரமம் ப$_4$க$_3$வத$_3$பசாரத்திலே சேருமென்னுமபி$_4$ப்ராயத்தாலேயாதல்; அக்ருத்யகரணாத்$_3$யபேக்ஷயா ப$_4$க$_3$வத$_3$பசாராதி$_3$கள் க்ரூரங்களாகையாலே அவற்றினுடைய அநுஷ்ட$_2$ாநத்தைச் சொன்னபோதே தத$_3$நுஷ்ட$_2$ாநம் கிம்புநர் ந்யாயஸித்$_3$த$_4$மிறே யென்னுமபி$_4$ப்ராயத்தாலேயாதல்.

அங்ஙனன்றிக்கே மநஸேத்யாதி$_3$க்குச்சேர கரணபே$_4$த$_3$நிப$_3$ந்த$_4$நமான கார்யபே$_4$த$_3$த்தைத் திருவுள்ளம்பற்றி த்ரிவித$_4$ாபசாராந் என்கிறாராகவுமாம். அப்போதைக்கு ஒரொரு அபசாரங்களை கரணத்ரயத்தாலும் அநுஷ்டி$_2$த்தேனென்று பொருளாகக்கடவது. (ஸோऽஹம்) கீழ்ச்சொன்னபடியே அபசாரங்களைச் செய்யாவிடில் ஸத்தைபெறாத அடியேன். (தவ) ‘‘ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் யதிராஜோ ஜகத்கு$_3$ரு:। ஸ ஏவ ஸர்வபூ$_4$தாநாம் உத்$_3$த$_4$ர்த்தா நாஸ்தி ஸம்ஶய:॥’’ () என்கிறபடியே ஸர்வோத்$_3$த$_4$ாரகரான தேவரீருக்கென்னுதல். ‘‘வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்$_3$ருஶம் ப$_4$வதி து$_3$:கி$_2$த:’’ (ரா.அ. 2–41) என்கிறபடியே பரது$_3$:க$_2$ம் பொறுக்கமாட்டாத ம்ருது$_3$ப்ரக்ருதிகரான தேவரீருக்கென்னுதல்.

(அப்ரியகர:) உபகாரத்தைப்பார்த்தாலும் ஸௌகுமார்யத்தைப்பார்த்தாலும் ப்ரியமே செய்யத்தக்கவிஷயத்தில் அப்ரியத்தைச் செய்யாநின்றேன். ஶிஷ்யன் ஆசார்யனுகப்பிலே ஊன்றிப்போருமென்கைக்கெதிர்த்தட்டாயாயிற்று அடியேன் நிலையென்கிறார். (அப்ரியகர:) நெஞ்சாலும் அப்ரியம் செய்ய நினைக்கவொண்ணாத விஷயத்தில் கிடீர் அடியேன் அப்ரியத்தை காயிகமாகச் செய்வதென்கிறார்.

ஆகில் நம்முன் நிற்கும் விரகென்னென்ன (ப்ரியக்ருத்$_3$வத்) தேவரீர் திருவுள்ளம் அறிய தேவரீர்க்கு விப்ரியம் செய்தேனேயாகிலும் அது தேவரீர் திருவுள்ளத்தில் தட்டாதபடி தேவரீர் திருவுள்ளத்தாலே ப்ரியம் செய்வான்போல் வர்த்தித்தேன். அதுகொண்டு தேவரீர் திருமுன்பே நிற்கலாய்த்தென்கிறார். ராவணன் ஸந்யாஸிவேஷத்தைக்கொண்டு பிராட்டியை வஞ்சித்தாப்போலே

*அடியேன் ஸாத்த்விகவேஷத்தை த$_4$ரித்து தேவரீரையும் வஞ்சித்தேன் என்று கருத்து. (ஏவம் காலம் நயாமி) இப்படி ஆசார்யாபசாரம் பண்ணுதொழியில் அடியேனுக்கு காலம் செல்லாதென்கிறுர். (காலமேவம் நயாமி) ''கு$_3$ணநுப$_4$வ கைங்கர்யங்களே போதுபோக்காகையும்'' (முமுக்ஷுப்படி 116 )என்கிறபடியே கு$_3$ணநுப$_4$வகைங்கர்யங்களால் போக்கத்தக்க காலத்தைக்கிடீர் அடியேன் அவ்விஷயங்களை வஞ்சித்து அதுவே யாத்ரையாய்ப் போக்குகிறதென்கிறுர். இவரிப்படி விண்ணப்பம் செய்தவாறே, இவர் செய்த அபசாரங்களைத் தம் திருவுள்ளத்தில் தட்டாமல் ''ஸ்வாபராத$_4$ங்களை அறிந்து அநுப$_4$வித்து ப்ராப்த விஷயத்தில் அவற்றை விண்ணப்பம் செய்யும்படி ஓரதி$_4$காரியும் உண்டாவதே'' என்று இவர் திருவுள்ளம் உகந்தபடி இருக்கும் இருப்பைக்கண்டு ''யதிராஜ'' என்று ஸம்பே$_3$ாதி$_4$க்கிறுர். அன்றிக்கே இவர் அநுதாபத்தைக் கண்டு இவர் இவ்வபசார கரணத்தில் நின்றும் மீண்டாராகும் விரகு ஏதோவென்று தம் திருவுள்ளத்தில் ஓடுகிறபடி தோற்றவிருக்கும் இருப்பைக்கண்டு ஆஶ்ரிதவிஷயத்தில் உஜ்ஜீவநயத்நமன்றே தேவரீருக்குப் புகர் என்று யதிராஜ ஶப்$_3$த$_3$த்தால் ஸம்பே$_3$ாதி$_4$க்கிறுராகவுமாம்.*

*இப்படி ஸாநுதாபமாக ஸ்வாபராத$_4$ங்களை விண்ணப்பம் செய்தபின்பும் அபசாரங்களிலே அந்வயிக்கிறபடியைக்கண்டு அபசாரங்களென்றறிந்து வைத்து அவற்றிலந்வயிக்கப்பெறுவதேயென்று (ததோऽஸ்மி மூர்க்க$_2$:) ஆகாது என்றறிந்து வைத்து அவைதன்னையே செய்கையாலிறே அடியேன் மூர்க்க$_2$ணுகிறதென்கிறுர்.*

पापे कृते यदि भवन्ति भयानुतापलज्जाः पुनः करणमस्य कथं घटेत ।
मोहेन मे न भवतीह भयादिलेशः तस्मात् पुनः पुनरघं यतिराज! कुर्वे ।। (११)

***பாபே க்ருதே யதி$_3$ ப$_4$வந்தி ப$_4$யாநுதாப–***
***லஜ்ஜா: புந: கரணமஸ்ய கத$_2$ம் க$_4$டேத ।***
***மோஹேந மே ந ப$_4$வதீஹ ப$_4$யாதி$_3$லேஶ:***
***தஸ்மாத் புந: புநரக$_4$ம் யதிராஜ! குர்வே॥ (11)***

***அவ.–*** *''ஶப்$_3$த$_3$ாதி$_3$பே$_4$ாக$_3$ருசிரந்வஹமேத$_4$தே ஹா'' என்பது ''அத்$_3$யாபி வஞ்சநபர:'' என்பது ''ததோऽஸ்மி மூர்க்க$_2$:'' என்பது ''ஹா ஹந்த'' என்பதாகா நின்றீர். ஆகையால் உமக்கு ப$_4$யாநுதாபாதி$_3$கள் உண்டுபோல் தோற்றுகிறது. இனி உமக்கு ப்ராயஶ்சித்தாதி$_4$காரம் உண்டாயிற்றே. பேற்றுக்குக் குறையென்னென்ன, அதுவோ அநுகாரமித்தனைபோக்கி மெய்யே அடியேனுக்கு அவையில்லை யென்கிறுர் (பாபேத்யாதி$_3$யால்).*

***வ்யா.–*** *(பாபே) பாபமாகிறது – நிஷித்$_3$த$_4$ாநுஷ்ட$_2$ாநம். நிஷித்$_3$த$_4$ங்கள் தானும் நாலுவித$_4$மாயிருக்கும். அதில் ஒன்றென்றே அநேகவித$_4$மாயிருக்கும். ஆக பாபமென்று ஜாத்யேகவசநமாய் பாபத்வஜாத்யவச்சி$_2$ந்ந ஸகலபாபங்களையும் சொல்லுகிறது. இது இவனுக்கு ப்ராப்திப்ரதிப$_3$ந்த$_4$கமாகிற மாத்ரமன்றிக்கே, இஹபரங்களிலும் ப$_4$யஹேதுவாயிருக்கும். இஹத்தில் ப்ரத்யக்ஷ த$_3$ண்ட$_3$ஹேது*

வாகையாலும், லோகாபவாத$_3$ ஹேதுவாகையாலும் ப$_4$யஜநகமாயிருக்கும். பரத்தில் யமவஶ்யதா ஹேதுவாகையாலும் ப$_4$க$_3$வத$_3$ப்ரீதி ஜநகங்களாகையாலும், ப$_4$யஜநகமாயிருக்கும். இப்படியிருந்துள்ள பாபமானது (க்ருதே) ஸங்கல்பித்து விடுகையன்றிக்கே, காயிகமாகச் செய்யப்படாநிற்கச்செய்தேயும். (ப$_4$யாநுதாப லஜ்ஜா:) நாம் இவற்றைச் செய்தால் ப்ரத்யக்ஷத்தில் ராஜத$_3$ண்ட$_3$ லோகாபவாத$_3$ங்களும் பரத்தில் யமத$_3$ண்ட$_3$னையும் வருமேயென்கிற ப$_4$யமும், இப்படி ப$_4$யஹேதுவான பாபத்தைச்செய்தால் நாம் என்ன தப்புச்செய்தோ மென்கிற அநுதாபமும், இப்படி நரகஹேதுவான பாபத்தைச்செய்தால் நாம் என்கொண்டு ஶிஷ்டகே$_3$ாஷ்டியில் புகுரக்கடவோமென்கிற லஜ்ஜையும் முதல்தன்னிலே உண்டாகிறனவல்ல. (யதி$_3$ப$_4$வந்தி) ஒருநாள் வரையிலே உண்டாயிற்றதுகளாகில் (புந:கரணமஸ்ய கத$_2$ம் க$_4$டேத) ப$_4$யாநுதாபலஜ்ஜா நிவர்த்யமான இப்பாபத்தினுடைய புநரநுஷ்ட$_2$ானம் எவ்வகையில் கூடுவது. ப்ரதிப$_3$ந்த$_4$கம் கிடக்க கார்யமுண்டாமோவென்று கருத்து. ப்ராயஶ்சித்தமன்றோ பாபநிவர்த்தகமாவது, ப$_4$யாநுதாபாதி$_3$கள் பாபநிவர்த்தகங்களாகிறபடி எங்ஙனே யென்ன, மணிக்கு அக்$_3$நிஸ்வரூபநாஶகத்வமன்றியிலேயொழிந்தாலும் த$_3$ாஹப்ரதிப$_3$ந்த$_4$கத்வமுண்டாகிறாப்போலே ப$_4$யாநுதாபாதி$_3$களுக்கு பாபஸ்வரூபநாஶகத்வமன்றியிலேயொழிந்தாலும் உத்தரோத்தர பாபாநுஷ்ட$_2$ான ப்ரதிப$_3$ந்த$_4$கத்வமுண்டாகக்குறையில்லை. இத்தால் ஹா ஹந்தேத்யாதி$_3$யில் தோற்றுகிறது ப$_4$யாநுதாபாதி$_3$களுடைய அநுகாரமித்தனை போக்கி வாஸ்தவமன்றென்கிறது.

இப்படி லோகந்யாயமறிந்த உமக்கு ப$_4$யாநுதாபாதி$_3$கள் இல்லாமைக் கடியென்னென்ன, (மோஹேந மே) அதுக்கடி அடியேனுடைய அஜ்ஞாந மென்கிறார். மோஹமாவது – தே$_3$ஹாதிரிக்தமாயிருப்பதொரு ஆத்மவஸ்து உண்டென்றறியாதே தே$_3$ஹமே ஆத்மா என்றிருக்கையாகிற அஜ்ஞாநம். (மோஹேந மே) இவ்வஜ்ஞாநத்தையிட்டு நிரூபிக்கும்படியான அடியேனுக்கு என்னுதல். தே$_3$ஹாத்மாபி$_4$மாநியாய் பு$_3$த்$_3$தி$_4$பூர்வகமாக பாபத்தைப் பண்ணுநிற்கிற அடியேனுக்கென்னுதல். (ந ப$_4$வதீஹப$_4$யாதி$_3$லேஶ:) இப்படி பு$_3$த்$_3$தி$_4$பூர்வகமாக பாபத்தைச்செய்கையாலே ப$_4$யாநுதாபலஜ்ஜைகள் பூர்ணமாகவின்றிக்கே யொழிந்தாலும் அல்பாம்ஶமாகிலும் உண்டாகக்கூடுமே, அதுவுமில்லை. இங்கு அபி ஶப்$_3$த$_3$ம் – அத்$_4$யாஹார்யம். (தஸ்மாத்) பாபாநுஷ்ட$_2$ாந ப்ரதிப$_3$ந்த$_4$கங்களான ப$_4$யாநுதாபாதி$_3$களில்லாமையாலே (புந:புந:) மேலும் மேலும் (அக$_4$ம்) பாபத்தை (அக$_4$ம் புந: புந:) இதிலொரு புதுமையில்லை. ''ந நிந்தி$_3$தம் கர்ம தத$_3$ஸ்தி லோகே ஸஹஸ்ரஶோ யந்ந மயா வ்யத$_4$ாயி'' (ஸ்தோ.ர 23) என்கிறபடியே செய்த குற்றத்தையே மேன்மேலும் செய்யாநின்றேன். இவர் இப்படி அநுதாபஶூந்யராய் ப$_4$யாநுதாபாதி$_3$களின்றிக்கே மேன்மேலும் பாபத்தைச் செய்வேனென்றவாறே, நீர் இவ்வக்ருத்யகரணங்களுக்கெல்லாம் மூலமான இந்த்$_3$ர்யவஶ்யதையைத் தவிர்க்க மாட்டீரோவென்ன (யதிராஜ) அடியேனுடைய உஜ்ஜீவநத்துக்கு க்ருஷிபண்ணுகிற தேவரீரே இத்தைத்

*தவிர்த்தருளவேணுமென்று ஸம்பே$_3$ாதி$_4$க்கிறுராதல். (யதிராஜ குர்வே) மாத்ருஸந்நிதி$_4$யிருக்க ப்ரஜை கிணற்றில் விழுவதே என்கிறுர்.*

*''ப$_4$வதீ$_3$யப$_4$யாதி$_3$லேஶ:'' என்று பாட$_2$மானபோது இஹபரங்களிலே பிறர்நிமித்தமான ப$_4$யாதி$_3$களின்றிக்கேயொழிந்தாலும் நேரே ஹிதாஹிதங்களை யுபதே$_3$ஶிக்கிற நம்மிடத்தில் ப$_4$யமுமில்லையோவென்ன, அதுவுமில்லையென்கிறுர் (ப$_4$வதீ$_3$ய). மற்றையார் நிமித்தமான ப$_4$யாதிகளில்லாமையன்றிக்கே இவ்வாத்மா வினுடைய உஜ்ஜீவநத்துக்கு க்ருஷிபண்ணிப்போருகிற தேவரீர்நிமித்தமான ப$_4$யாதி$_3$லேஶமுமில்லை என்கிறுர். அன்றிக்கே யமாதி$_3$கள் நிமித்தமாய்வரும் ப$_4$யம்கெட்டு துணுக்கற்று மார்விலே கைவைத்து உறங்கும்படி இவனுக்கு அப$_4$யப்ரத$_3$ரான தேவரீர்நிமித்தமான ப$_4$யாதி$_3$லேஶமுமில்லையென்கிறுர்.*

*இவரைக்கொண்டு யமாதி$_3$கள்நிமித்தமாய்வரும் ப$_4$யம் கெடும்படி எங்ஙனேயென்ன, லோகவேத$_3$ங்களில் பாபமாயிற்று யமாதி$_3$கள்நிமித்தமான ப$_4$யம் வருகைக்கு ஹேது. அந்தப் பாபம் தானும்– (து$_3$ராசாரோऽபி) விஹிதங்களைச் செய்யாமலொழிந்தானேயாகிலும். இங்கு து$_3$ராசாரஶப்$_3$த$_3$த்தாலே நிஷித்$_3$த$_4$ா நுஷ்ட$_2$ாநத்தைச் சொல்லாமல் விஹித–அநநுஷ்ட$_2$ாநத்தைச் சொல்லுகிறது. மேல் ''ஸர்வாஶீ'' என்று நிஷித்$_3$த$_4$ாநுஷ்ட$_2$ாநத்தைச் சொல்லுகையாலே; து$_3$ர்ஜ்ஞேய மித்யாதி$_3$களிலே ஜ்ஞேயத்வாப$_4$ாவமிறே விவக்ஷிதம். (ஸர்வாஶீ) இது நிஷித்$_3$த$_4$ாநுஷ்ட$_2$ாநங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். அப$_4$க்ஷ்யப$_4$க்ஷணுதி$_3$கள்; நிஷித்$_3$த$_4$ங்களைச் செய்தானேயாகிலும். (க்ருதக்$_4$ந:) இரண்டுக்குமடியாக உபகாரக விஷயத்தில் உபகாரஸ்ம்ருதியில்லாதமாத்ரமன்றிக்கே செய்த உபகாரங்களை அப்போதே மறக்குமவனேயாகிலும். (நாஸ்திக:) அதுக்குமடியாக ஶாஸ்த்ர விஶ்வாஸமின்றிக்கே ஒழிந்தானேயாகிலும், இப்படி ஶாஸ்த்ர விஶ்வாஸாதி$_3$களின்றிக்கேயொழிந்ததுதான் எத்தனை காலமென்னில் (புரா) முன்புள்ளகாலமெல்லாம்; ஆக முன்புள்ள காலமெல்லாம் ஶாஸ்த்ரவிஶ்வாஸாதி$_3$ களின்றிக்கே விதி$_4$நிஷேத$_4$ங்களை அதிக்ரமித்து வர்த்தித்தானேயாகிலும். (ஆதி$_3$தே$_3$வம்) இவன் ஆஶ்ரயிப்பதற்கு முன்னே இவன்தன்னையும் அங்கீ$_3$கரிக்கை யிலுண்டான நசையாலே உஜ்ஜ்வலனுன எம்பெருமானை. (ஶ்ரத்$_3$த$_4$யா) விஸ்ரம்ப$_4$ ப$_3$ாஹுள்யத்தோடே கூட. (ஶரணம்) உபாயமாக (ஸமாஶ்ரயேத்$_3$யதி$_3$) இவனைப்பார்த்தால் ஆஶ்ரயிக்க விரகில்லை. அவனைப்பார்த்தால் இவன் ஆஶ்ரயியாவிடில் த$_4$ரிப்பில்லை. ஆகையாலே அவனுடைய ஜீவநாத்$_3$ருஷ்டத்தாலே இவன் அவனை ஆஶ்ரயித்தானுகில்; இங்கு விஸ்ரம்ப$_4$ப$_3$ாஹுள்யவாசியான ஶ்ரத்$_3$த$_4$ாஶப்$_3$த$_3$த்தாலே உபாயாந்தரநிவ்ருத்தியையும் ''ஸமாஶ்ரயேத்'' என்கிறவிடத்தில் ''ஸம்'' என்கிற உபஸர்க்க$_3$த்தாலே ஆஶ்ரயணத்தில் உபாயத்வ பு$_3$த்$_3$தி$_4$ நிவ்ருத்தியும் சொல்லப்படுகிறது. (தம்) அப்படி ஸர்வாபராத$_4$ விஶிஷ்டனுய் ப$_4$க$_3$வத்ஸமாஶ்ரயணம் பண்ணினவனை (ஜந்தும்) தே$_3$வதிர்யங் மநுஷ்யஸ்த$_2$ாவரங்களிலே யாதொன்றுகவுமாம் அதிலொரு நிர்ப$_3$ந்த$_4$மில்லை. (நிர்தே$_3$ாஷம் வித்$_3$தி$_4$) ஸவாஸநமாக ''வானே மறிகடலோ'' (பெரிய திருவ. 54)*

*என்கிறபடியே போனவிடம் தெரியாதேபோன பாபங்களையுடையனாக பு$_3$த்$_3$தி$_4$ பண்ணக்கடவி. என்கொண்டென்னில் (ப்ரப$_4$ாவாத் பரமாத்மந:) தனக்கு மேற்பட வ்யாபகரில்லாமல் தான் ஸர்வாபேக்ஷயா வ்யாபகனான எம்பெருமானுடைய ப்ரபு$_4$த்வஶக்தியாலே; பாபமாத்ரம் க்ரியாரூபமாகையாலே அது செய்தபோதே நஶித்துப்போம். அத்தைத் திருவுள்ளத்தில் வைத்து இவனிப்படி விதி$_4$நிஷேத$_4$ங்களை அதிக்ரமிப்பதே யென்னும் நிக்$_3$ரஹத்தாலே ப்ராப்தகாலங்களிலே தத$_3$நுரூபமான ப$_2$லத்தைக் கொடுப்பான் ஈஶ்வரனாயிற்று. அவன்தானே ஶரணாக$_3$தியை வ்யாஜீகரித்து இச்சேதநனை அநுக்$_3$ரஹித்தவாறே தந்நிக்$_3$ரஹம் கழியுண்கையாலே பாபங்களெல்லாம் போயிற்றென்கிறது. ''ஶ்ரத்$_3$த$_4$யாஸஹிதம் ஆதி$_3$தே$_3$வம்'' என்று யோஜிக்கவுமாம். அப்போது ''ஶ்ரத்$_3$த$_4$யா தே$_3$வோ தே$_3$வத்வம் அஶ்நுதே'' (யஜுர்.கா.3–3) என்கிறவிடத்தில் ஶ்ரத்$_3$த$_4$ாஶப்$_3$த$_3$ம் பிராட்டிக்கு வாசகமாகிறது. இத்தால் ஈஶ்வரன் ஜக$_3$த்காரணனாகிறதும் பரஞ்ஜ்யோதிஸ்ஸா கிறதும் சேதநரை அங்கீ$_3$கரிக்குமிடத்தில் இவர்கள் ஆஶ்ரயிப்பதற்கு முன்னே அவர்களை ரக்ஷிக்கைக்கு அவஸரப்ரதீக்ஷனாயிருக்குமிருப்பும் பிராட்டி ஸம்ப$_3$ந்த$_4$த்தாலே என்கிறது. ஆக இஶ்லோகத்தில் சொல்லுகிறபடியே ப்ரபத்தியாய்த்து ப்ராயஶ்சித்த ரூபமாயிருக்கும். இப்ரபத்தி தானும் ''மந்த்ரரத்நம் த்$_3$வயம் ந்யாஸ: ப்ரபத்திஶ் ஶரணாக$_3$தி:'' (?) என்கிறபடியே த்$_3$வயாத்மகமாய் ''ஆசார்யாத்தை$_4$வ வித்$_3$யா விதி$_3$தா ஸாதி$_4$ஷ்டம் ப்ராபயதி'' (ச$_2$ாந்.4–9–3) என்கிறபடியே ஆசார்யாதீ$_4$நமாயிருக்கும். ஆசார்யத்வந்தானும் ''தஸ்மிந் ராமாநுஜார்யே கு$_3$ருரிதி ச பத$_3$ம் ப$_4$ாதி நாந்யத்ர'' () என்கிறபடியே எம்பெருமானாருக்கு அஸாத$_4$ாரணமாயாயிற்றிருப்பது. மற்றையவர்களுடைய ஆசார்யத்வம் இவருடைய ஸம்ப$_3$ந்த$_4$நிப$_3$ந்த$_4$நம். ஆகையால் இவர் ஸம்ப$_3$ந்த$_4$முண்டாகவே யமாதி$_3$கள்நிமித்தமாய் வரும் ப$_4$யம் கெடக்குறையில்லை.*

*(தஸ்மாத்) ஸகலப$_4$யநிவர்த்தகரான தேவரீர்நிமித்தமான ப$_4$யாதி$_3$களில்லாமையாலே (புந:புநரக$_4$ம் யதிராஜ குர்வே) மேன்மேலும் பாபத்தைச் செய்யாநின்றேன் என்கிறார். அன்றிக்கே (ப$_4$வதீ$_3$ய) ''அவரெம்மை நின்றாளும் பெரியவரே'' என்கிற படியே அடியேனை அடிமைகொள்ளவல்ல தேவரீர்ஸம்ப$_3$ந்தி$_4$கள்நிமித்தமான ப$_4$யாதி$_3$லேஶமுமில்லை என்கிறாராகவுமாம். இத்தால் ஆசார்ய-ததீ$_3$ய-நிமித்தமான ப$_4$யாதி$_3$களின்றியிலே அபராத$_4$ங்களைச் செய்வேனென்கையாலே அஸஹ்யா பசாரங்களையேயாயிற்று அடியேன் செய்வதென்கிறார். (11)*

अन्तर्बहिस्सकलवस्तुषु सन्तमीशम् अन्धः पुरस्स्थितमिवाहमवीक्षमाणः ।
कन्दर्पवश्यहृदयस्सततं भवामि हन्त त्वदग्रगमनस्य यतीन्द्र! नार्हः ।। (१२)

***அந்தர்ப$_3$ஹிஸ்ஸகலவஸ்துஷு ஸந்தமீஶம்***
***அந்த$_4$:புரஸ்ஸ்தி$_2$தமிவாஹமவீக்ஷமாந:।***
***கந்த$_3$ர்பவஶ்யஹ்ருத$_3$யஸ்ஸததம் ப$_4$வாமி***
***ஹந்த த்வத$_3$க்$_3$ரக$_3$மநஸ்ய யதீந்த்$_3$ர! நார்ஹ:।। (12)***

***அவ.–*** *''புந: புநரக$_4$ம் யதிராஜ குர்வே'' என்று விண்ணப்பம் செய்தவாறே நீர் நம்மேல் பழியொதுக்குகிறதென்? ஸர்வவஸ்துக்களிலும் அந்தர்யாமியாய் ஸ்வரூபஸ்தி$_2$திப்ரவ்ருத்திநிவ்ருத்திகளுக்குக் கடவனாய், கண்டால் கண்டாஶ்ரயிக் கலாம்படி அர்ச்சாரூபேண ஸுலப$_4$னாய் ஸர்வநியந்தாவான எம்பெருமானைக் கண்டு உம்முடைய இந்த்$_3$ரியவஶ்யதையைத் தவிருமென்ன, அவன் ஸர்வஸுலப$_4$னாய் ஸர்வக$_3$தனாயிருந்தானேயாகிலும், அடியேன் அவனைக்காணமல் காமபரவஶனாகாநின்றேன். இனி தேவரீர்திருமுன்பே வருகைக்கு யோக்$_3$யனன் றென்கிறார் (அந்தரித்யாதி$_3$யால்).*

***வ்யா.–*** *(அந்தர்ப$_3$ஹி:) ''அந்த:ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா'' (யஜு.ஆர. 3–10) என்றும், ''ஏஷ ஸர்வபூ$_4$தாந்தராத்மா'' (ஸுப$_3$ாலோபநிஷத் 7) என்றும், ''அந்தர்ப$_3$ஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி$_2$த:'' (தை.நா) என்றும், ''உடன்மிசைஉயிரெனக்கரந்தெங்கும் பரந்துளன்'' (திருவாய் 1–1–7) என்றும், ''அடியேனுள்ளாள் உடலுள்ளான் அண்டத்தகத்தான் புறத்துள்ளான்'' (திருவாய் 8–8–2) என்றும் சொல்லுகிறபடியே ஸகலவஸ்துக்களிலும் அந்தர்ப$_3$ஹிர் வ்யாப்தனாய், இப்படி வ்யாபிக்கிறதுதான் எதுக்கெனில் (ஸகலவஸ்துஷு) ஸகலபத$_3$ார்த்த$_2$ங்களுக்கும் வஸ்துத்வாதி$_3$களையுண்டாக்குகைக்காக. ''தத$_3$நுப்ரவிஶ்ய ஸச்ச த்யச்சாப$_4$வத்'' (தை.ஆந) ''அநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி'' (ச$_2$ாந் 6–3–2) என்றும் சொல்லக்கடவதிறே.*

*(ஸந்தம்) இவற்றுக்கு வஸ்துத்வாதி$_3$களை யுண்டாக்கித்தான் ஸத்தை பெற்றானாயிருக்கை. (புரஸ்ஸ்தி$_2$தம்) அந்த:ப்ரவிஶ்ய ஸத்தாத$_4$ாரகனாய் நியமித்துப் போருகைமாத்ரமன்றிக்கே இவன் கண்ணாலே கண்டு ஆஶ்ரயிக்கலாம்படி அர்ச்சா ரூபேண முன்னிற்குமவனாய். ''பின்னானார் வணங்கும்சோதி''(திருநெடு 10)யிறே. (ஈஶம்) இவற்றினுடைய கார்யமெல்லாம் தனக்கு புருஷார்த்த$_2$மாக்குகைக்கீடாக ''ஈஶேஶிதவ்யஸம்ப$_3$ந்த$_4$ாத்$_3$ அநித$_3$ம்ப்ரத$_2$மாத$_3$பி'' (லக்ஷ்மீதந்த்ரம் 17–70) என்கிறபடியே ஸ்வாமியானவன். (ஸகலவஸ்துஷு ஸந்தம்) ப்ரஜையினுடைய ஸர்வாங்க$_3$ஸ்பர்ஶம் தாயானவளுக்கு த$_4$ாரகமாகிறாப்போலே காணும் இவனுக்கும் இவற்றின் ஸ்பர்ஶம். (ஸகலவஸ்துஷு) சிறியார் பெரியாரென்ப தில்லை. ஸங்கல்பரூபஜ்ஞாநத்தாலன்றிக்கே ஸ்வரூபேண வர்த்திக்கிறவனாய். (ஈஶம்) இப்படி செய்கை சிறியார் பெரியாரின்றிக்கே இவற்றினுடைய ஸ்பர்ஶம் தனக்கு த$_4$ாரகமாகைக்கீடான ப்ராப்தியையுடையவனாய்.*

*(புரஸ்ஸ்தி$_2$தம்) ப்ராப்தனாய், து$_3$ர்லப$_4$னாயிருக்கையன்றிக்கே கண்ணாலே கண்டாஶ்ரயிக்கலாம்படி ஸுலப$_4$னானவனாய். (அந்தர்ப$_3$ஹிஸ்ஸகலவஸ்துஷு ஸந்தமீஶம்) ஸுஶீலனாய் ஸுலப$_4$னாய் தே$_3$ாஷபே$_4$ாக்$_3$யனாய் ஸ்வாமியான பெரியபெருமாளை.*

*(அந்த$_4$ இவ) கண்ணில் வைஶத்$_3$யமில்லாதவன்போல். அந்த$_4$ன் பத$_3$ார்த்த$_2$ த$_3$ர்ஶநம் பண்ணாதொழிகிறது, பத$_3$ார்த்த$_2$த்தின் குறையன்றே. அதுபோல ஸர்வேஶ்வரன் வாத்ஸல்யாதி$_3$கு$_3$ணவிஶிஷ்டனாய் அர்ச்சாரூபேண முன்நிற்க,*

$_4$வியாமை இவன்குறையிறே. அதாவது – ஸம்ப$_3$ந்த$_4$ஜ்ஞாந பூர்வகமாகக் காணுமை; இப்படி காணுமைக்கு ஹேது ஏதென்ன (அஹம்) தே$_3$ஹமே ஆத்மாவென்றிருக்கும் அடியேனென்னுதல். ''மித்$_2$யாசராமி'' இத்யாதி$_3$யிற் சொல்லுகிறபடியே பாபம்செய்கையே போந்திருக்கிற அடியேன் என்னுதல். இத்தால் அவன் காணுமைக்கு ஹேது தே$_3$ஹாத்மாபி$_4$மாநமும், தந்மூலமான பாபமுமென்றதாயிற்று.

(அவீக்ஷமாண:) அவன் அடியேன்தன்னைக் காண்கைக்கீடாக க்ருஷி பண்ணுமாப்போலேயாய்த்து அடியேன் அவனைக்காணுமைக்கு க்ருஷி பண்ணும்படியுமென்கிறார். இத்தால் பெற்ற அம்ஶம் ஏதென்ன (கந்த$_3$ர்பவஶ்ய ஹ்ருத$_3$ய:) அடியேன் மநுஸ்ஸு காமபரவஶமாய்த்தென்கிறார். அதாவது – ப்ரயோஜநாந்தரங்களை விரும்புகை. இதுதானெத்தனைகாலமென்ன (ஸததம்) இதுக்கொரு காலநியதியில்லை. ஸர்வகாலமுமென்கிறார். (ப$_4$வாமி) இது தான் வந்தேறியன்றிக்கே ஸத்தையாய்விட்டதென்கிறார்.

(ஈஶமவீக்ஷமாண: கந்த$_3$ர்பவஶ்ய ஹ்ருத$_3$யஸ்ஸததம் ப$_4$வாமி) ப்ராப்த விஷயத்தில் கண்வையாமையன்றோ அடியேனுக்கு இவ்வநர்த்த$_2$ம் உண்டாய்த் தென்கிறார். (ஹந்த) கீழ் தமக்குண்டான ப்ராப்தவிஷயத்தைக் கடக்க நிற்கையும் அப்ராப்தவிஷயங்களை இடைவிடாமல் நிரூபிக்கையும் கண்டு ஐயோவென்கிறார். அன்றிக்கே மேற்சொல்லுகிற அயோக்$_3$யதையை நினைத்து ஐயோ என்கிறாராகவுமாம். (த்வத$_3$க்$_3$ரக$_3$மநஸ்ய யதீந்த்$_3$ர நார்ஹ:) ஈஶ்வரன் ''ந க்ஷமாமி''(வராஹ புராணம்)க்கிலக்கான வன்றும் கைவிடாமல் ''தேந மைத்ரீ ப$_4$வது தே'' (ரா.ஸு.21–20) என்னும் பிராட்டியைப்போலே ஸ்வோபதே$_3$ஶாதி$_3$களாலே ப$_4$க$_3$வத்$_3$ விஷயத்தில் அத்$_3$வேஷாதி$_3$களையுண்டாக்கி ரக்ஷிக்கும் தேவரீர்திருமுன்பே வருகைக்கு யோக்$_3$யனுகிறிலேன்.

''த்வத$_3$க்$_3$ரக$_3$மநஸ்ய நார்ஹ:'' என்கிறது – தேவரீர்திருமுன்பே வருகைக்கும் யோக்$_3$யதையில்லாதவனுக்குக் கிட்டுகையென்றொரு பொருளுண்டோ என்னுமபி$_4$ப்ராயத்தாலே. (த்வத$_3$க்$_3$ரக$_3$மநஸ்ய நார்ஹ:) தேவரீர் இந்த்$_3$ரியநியமந ஶக்தரில் தலைவரானமையை அடியேனுஜ்ஜீவிக்கைக்கு உடலென்றிருந்தேன். அது விபரீதமானதேயென்கிறார். (ஈஶமவீக்ஷமாணஸ்த்வத$_3$க்$_3$ரக$_3$மநஸ்ய நார்ஹ:) ப$_4$க$_3$வத்ப்ராப்யத்வஜ்ஞாநமிறே ஆசார்யஸமாஶ்ரயணத்துக்கு மூலம். அதில்லாமையாலே அடியேன் தேவரீர்திருமுன்பே வருகைக்கு யோக்$_3$யனன்றென்கிறார். (கந்த$_3$ர்பவஶ்ய ஹ்ருத$_3$யஸ்த்வத$_3$க்$_3$ரக$_3$மநஸ்ய நார்ஹ:) காமபரவஶனுன அடியேன் ஜிதேந்த்$_3$ரியரில் தலைவரான தேவரீர்திருமுன்பே வருகைக்கு யோக்$_3$யதை தானுண்டோவென்கிறார்.

(ஈஶமவீக்ஷமாண: கந்த$_3$ர்பவஶ்ய ஹ்ருத$_3$யஸ்த்வத$_3$க்$_3$ரக$_3$மநஸ்ய நார்ஹ:) அடியேனைப் பார்த்தாலும் தேவரீரைப் பார்த்தாலும் அடியேன் தேவரீர்திருமுன்பே வருகைக்கு யோக்$_3$யதை இல்லையென்கிறார். அடியேன் ''மாதவனே கண்ணுற நிற்கிலும் காணகில்லா''(இரா,நூ,41)தவனுய், ''பொருளும்புதல்வரும் பூமியும்

*பூங்குழலாருமென்றே மருள்''(இரா.நூ. 39)கொண்டவன். தேவரீர், ''அரங்கன் மலரடிக்காளுற்றவரே தமக்குற்றவராய்க் கொள்ளும் உத்தமர்''(இரா.நூ. 57). (ஹந்த நார்ஹ:) யோக்$_3$யதையும் போயிற்றுக்கிடீரென்று க்லேஶிக்கிறார். (ஈஶமவீக்ஷமாணஸ்த்வத$_3$க்$_3$ரக$_3$மநஸ்ய நார்ஹ:) முதல் தன்னிலே ஸாமாந்யத்தில் கண் வையாதவன் விஶேஷத்தைக் கிட்டுகை என்றொரு பொருளுண்டோ வென்கிறார். (12)*

तापत्रयीजनितदुःखनिपातिनोऽपि देहस्थितौ मम रुचिस्तु न तन्निवृत्तौ ।
एतस्य कारणमहो मम पापमेव नाथ! त्वमेव हर तद्यतिराज! शीघ्रम् ।। (१३)

***தாபத்ரயீஜநிதது$_3$:க$_2$நிபாதிநோऽபி***
***தே$_3$ஹஸ்தி$_2$தௌ மம ருசிஸ்து ந தந்நிவ்ருத்தௌ।***
***ஏதஸ்ய காரணமஹோ மம பாபமேவ***
***நாத$_2$! த்வமேவ ஹர தத்$_3$யதிராஜ! ஶீக்$_4$ரம்।। (13)***

***அவ.–****இவர் ''நார்ஹ:'' என்றவாறே என்தான் இப்படி க்லேஶிப்பது? நீர் ஸம்ஸாரத்தில் வர்த்தித்திலீரோ? அதில் தாபத்ரயத்தால் வரும் து$_3$:க$_2$ங்களைக்கண்டு அருசி பிறவாதோ? பிறந்தால் அது யோக்$_3$யதையன்றோ என்ன, அடியேனுக்கு இதில் வரும் து$_3$:க$_2$ாநுப$_4$வம் கண்டும் அருசி பிறவாமைமாத்ரமன்றிக்கே, மேன்மேலும் ருசிஅபி$_4$வ்ருத்$_3$த$_4$மாகாநின்றதென்கிறார் (தாபேத்யாதி$_3$யால்).*

***வ்யா.–*** *(தாபத்ரயீ) ஆத்$_4$யாத்மிக–ஆதி$_4$தை$_3$விக–ஆதி$_4$பௌ$_4$திக–பே$_4$தே$_3$ந மூன்று வகைப்பட்டிருந்துள்ள தாபங்களுடைய த்ரயத்தாலேயென்னுதல், ஸமூஹத்தாலேயென்னுதல். இவைகள் தான் ஒரொன்றே அநேகவித$_4$மாயிருக்கு மிறே. ஆத்$_4$யாத்மிகங்களாவன – தன்னிடத்திலேயுண்டாமவை. அவையாவன:– அபேக்ஷிதாலாப$_4$த்தால் வரும் மாநஸவ்யாதி$_4$களும், ஜ்வராதி$_3$களால் வரும் ஶரீர வ்யாதி$_4$களும். ஆதி$_4$தை$_3$விகங்களாவன – இவனையறியாமல் தை$_3$வயத்நத்தால் வரும் அஶநிபாதாதி$_3$கள். ஆதி$_4$பௌ$_4$திகங்களாவன – ஸர்ப்பத$_3$ம்ஶாதி$_3$களால் வரும் நலிவுகள். இப்படி இருந்துள்ள தாபத்ரயத்தாலே (ஜநித) உண்டாக்கப் பட்டிருந்துள்ள. இத்தால் காரணவைசித்ர்யத்தோடொக்கும் கார்யவைசித்ர்யமும் என்கிறது. ''ஜநித'' என்று பூ$_4$தார்த்தே$_2$ 'க்த'ப்ரத்யயமாய் அத்தால் து$_3$:க$_2$ாம்ஶத்தில் ஜந்யமாநமாதல், ஜநிஷ்யமாணமாதலில்லையென்கிறது. இத்தால் ருசி பிறவாமைக்கு ஸாமக்$_3$ரீவைகல்யம் சொல்லவொண்ணாதென்கிறது. அன்றிக்கே, ஆதி$_3$கர்மணி 'க்த'ப்ரத்யயமாய் ஜந்யமானவென்னவுமாம். இத்தால் து$_3$:க$_2$முண் டாய் கழிந்ததுமன்றிக்கே உண்டாகப்போகிறதுமன்றிக்கே இடைவிடாமலுண் டாகிறதாகையாலும் ஸாமக்$_3$ரீவைகல்யம் சொல்லவொண்ணா தென்கிறது.*

*(து$_3$:க$_2$நிபாதிநோऽபி) இப்படி ப$_3$ஹுவித$_4$மாயிருந்துள்ள து$_3$:க$_2$ங்களில் அதின் கரைகாணாமல் விழாநின்றேனேயாகிலும். இத்தால் து$_3$:க$_2$ாநுப$_4$வமில்லா மையையிட்டு அருசிபிறவாமையைச் சொல்லவொண்ணாதென்கிறது. 'நி' என்கிற உபஸர்க்க$_3$த்தாலே ஸுக$_2$ப்$_4$ராந்த்யா வரும் து$_3$:க$_2$மன்றிக்கே து$_3$:க$_2$த்வேந வரும்*

*து$_3$:க$_2$ாநுப$_4$வத்தைச் சொல்லுகிறது. அதில் வர்த்தமாநநிர்த்தே$_3$ஶத்தாலே து$_3$:க$_2$முண்டாய்க் கழிகிறுப்போலே அன்றுய்த்து {ஆய்த்து–பா} து$_3$:க$_2$ாநுப$_4$வம் உண்டாகிறபடியுமென்கிறது. அன்றிக்கே, து$_3$:க$_2$ம் போலே உண்டாய்க்கழிந்த தன்றிக்கே து$_3$:க$_2$ாநுப$_4$வம் உண்டாகா நின்றதென்கிறது.*

*(மம) தே$_3$ஹமே ஆத்மாவென்றிருக்கும் அடியேனுக்கென்னுதல். து$_3$:க$_2$ாநுப$_4$வமே நிரூபகமான அடியேனுக்கென்னுதல். (தே$_3$ஹஸ்தி$_2$தௌ து ருசி:) து$_3$:க$_2$ாநுப$_4$வமூலமான தே$_3$ஹத்தினுடைய இருப்பிலே கிடீர் ருசி உண்டாகிறது. (மம து தே$_3$ஹஸ்தி$_2$தௌ ருசி:) து$_3$:க$_2$ாநுப$_4$வமூலமென்றறிந்தவதில் ருசி ஒருவருக்கும் பிறவாது. அடியேனுக்கு அங்ஙனன்றியே அதினுடைய ஸம்ப$_3$ந்த$_4$த்தாலுண்டான து$_3$:க$_2$ங்களை அநுப$_4$வியாநிற்கச்செய்தேயும் அதில் ருசியுண்டாகிற தென்கிருர். (மம ருசிஸ்து தே$_3$ஹஸ்தி$_2$தௌ) அநிவ்ருத்தமான ப$_3$ாத$_4$கத்தில் அருசி பிறவாவிடிலும், உபேக்ஷயாகிலும் உண்டாகக்கூடுமிறே. அடியேனுக்கு அங்ஙனன்றிக்கே ப$_3$ாத$_4$கஸம்ரக்ஷணத்தில் கிடீர் ருசி உண்டாகிறதென்கிருர்.*

*(ந தந்நிவ்ருத்தௌ) து$_3$:க$_2$ஹேதுவான தே$_3$ஹத்தினுடைய நிவ்ருத்தியில் ருசி உண்டாகிறதில்லை. து$_3$:க$_2$ாரம்ப$_4$கமான ஶரீரத்தில் அருசி பிறக்கக்கூடுமிறே. அதுவுமில்லையென்கிருர். (து$_3$:க$_2$நிபாதிநோऽபி மம ருசிஸ்து தே$_3$ஹஸ்தி$_2$தௌ) அடியேனுடைய ருசி லோகவிலக்ஷணை கிடீர். மற்றெல்லாருடையவும் ருசியானது து$_3$:க$_2$ஹேதுவாமதில் நின்றும் நிவ்ருத்தையாகா நிற்க அடியேனுடைய ருசியானது து$_3$:க$_2$ஹேதுவாமதில் அபி$_4$வ்ருத்$_3$த$_4$மாகாநின்றதென்கிருர். (மம ருசிஸ்து தே$_3$ஹஸ்தி$_2$தௌ) தே$_3$ஹாத்மாபி$_4$மாநியான அடியேனுடைய ஸம்ப$_3$ந்தி$_4$நியாய் இதர விஜாதீயையான ருசிதே$_3$ஹத்தினுடைய இருப்பிலே உண்டாகாநின்றதென்கிருர். ஸ்வவிஷயத்தில் அருசி ஒருவர்க்கும் உண்டாகாதென்று கருத்து.*

*இப்படி ப$_3$ாத$_4$கமான ஶரீரத்தில் அருசி பிறவாமைக்கு அடியென்னென்ன (ஏதஸ்ய காரணமஹோ மம பாபமேவ) இவ்விரண்டுக்கும் அடி அடியேன் பண்ணிவைத்த பாபமென்கிருர். ''ஏவம் ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே$_2$ ப்$_4$ராம்யமாணே ஸ்வகர்மபி$_4$: ஜீவே து$_3$:க$_2$ாகுலே'' (அஹிர்பு$_3$த்$_4$.ஸம்ஹி. 14–8) என்னக்கடவதிறே. (மம பாபம்) பிறர்பண்ணினதன்று. (பாபமேவ) கர்மமடியான ப$_4$க$_3$வத் ஸங்கல்பமிறே ஸம்ஸாரப்ரவர்த்தகம். அங்ஙனன்றிக்கே கேவலகர்மமாய்த்து ஸம்ஸாரப்ரவர்த்தகமென்கிறது. பரமத$_3$யாளுவான ஈஶ்வரன் பரமது$_3$:க$_2$ஜநக மான ஶரீரத்தில் ருசி பிறக்கும்படி பண்ணுவனே என்கிருர்.*

*அன்றிக்கே, ''யதி$_3$வா ராவண: ஸ்வயம்'' (ரா.யு.18–35) என்றவன் ப்ரதிகூலித்தவர் பக்கல் ஆபி$_4$முக்$_2$யம் கொண்டு ரக்ஷிக்கையில், க்ருதஸங்கல்பனு யிருக்க 'ந நமேயம்' (ரா.யு.36–11) என்னும்படியிறே என்பாபம் இருப்பதென்னவுமாம். (அஹோ) ஸ்வதோ$_3$ஷத்தினுடைய ப$_3$லாதி$_4$க்யத்தைக் கண்டு அஹோவென்று ஆஶ்சர்யப்படுகிருராதல், து$_3$:க$_2$ப்படுகிருராதல்.*

*நீர் இப்படி ஆஶ்சர்யப்படுவது, து$_3$:க$_2$படுவதாகாநின்றீராகில் உம்முடைய*

பாபநிவ்ருத்திக்கு யத்நிப்பாராரென்ன (நாத$_2$ த்வமேவ ஹர தத்) இத்தலையில் இழவு பேறுகள் தன்னதாம்படியான ஸம்ப$_3$ந்த$_4$முடைய தேவரீரே அப்பாபத்தைப் போக்கியருளவேணுமென்கிறார். (நாத$_2$) ஆருடைமை அழிகிறது. ஆருடைமைக்கு ஆர் ப்ரார்த்தி$_2$க்கிறது என்னவுமாம். (த்வம்) பாபத்தைப்போக்கும் விரகறியும் தேவரீர். (த்வமேவ) அடியேன் அறியில் தவிர்த்துக்கொள்ளுவேனுகையாலே அடியேன் அறியாமல் தேவரீரே போக்கியருளவேணுமென்கிறார். (த்வமேவ) ''த்யஜ்ய,வ்ரஜ'' என்று தேவையிடாதே ''ப$_4$வேயம் ஶரணம் ஹி வ:'' (ரா.ஸு.58–56) என்னுமவள்கோடியிலேயான தேவரீரேயென்றுமாம். (நாத$_2$ த்வமேவ ஹர தத்) எதிர்த்தலையில் ஒருபச்சையின்றிக்கே தேவரீரறிந்த ஸம்ப$_3$ந்த$_4$மே ஹேதுவாக ரக்ஷிக்கும் தேவரீரேயென்னவுமாம். (த்வமேவ ஹர தத்) தேவரீரை அகலுகைக்கடியான தே$_3$ஹத்தில் ருசியை யுண்டாக்கும்போது அடியேன்பாபமே அஸாத$_4$ாரண காரணமாகிறுப்போலே, அத்தைப் போக்கும்போது தேவரீரேயாகவேணுமென்னுமாம். (த்வமேவ) ஸமிதை$_4$பாதி ஸாவித்ரிபாதி போலே அடியேனும் தேவரீருமாகாமல் நிரபேக்ஷரான தேவரீரேயென்னுமாம். (தத்) ''மமைவ து$_3$ஷ்க்ருதம் கிஞ்சித் மஹத$_3$ஸ்தி ந ஸம்ஶய:'' (ரா.ஸு.38–47) என்கிறபடியே ப்ரத$_2$மம் அல்பத்வேந ஜ்ஞாதமாய் ப$_2$லாநுப$_4$வ த$_3$ஶையில் ப$_3$ஹுதமத்வேந ஜ்ஞாதமான பாபத்தையென்னுமாம்.

இப்படி இவர் விண்ணப்பம் செய்தவாறே ப்ராப்தி உண்டாகிலும் பாபநிவ்ருத்திக்கு ஶக்தரன்றோ வேண்டுவதென்ன (யதிராஜ) பாபநிவர்த்தந ஶக்தியன்றோ தேவரீருக்கு ஔஜ்ஜ்வல்யகரமென்கிறார். அன்றிக்கே இவர் இப்படி விண்ணப்பம் செய்தவாறே இவருடைய பாபநிவ்ருத்தியிலே யத்நித்தமைதோற்ற விருக்குமிருப்பைக் கண்டு இதுவன்றோ தேவரீருக்கு ப்ரகாஶகரமென்கிறாராகவுமாம். (ஶீக்$_4$ரம்) அத்தலையில் ப்ராப்தியையும் ஶக்தியையும் கண்டு ஶீக்$_4$ரமென்று த்வரிக்கிறார்.

அன்றிக்கே ''நின்றவாநில்லா நெஞ்சினையுடையேன்'' (பெரிய திரு. 1–1–4) என்கிறபடியே தே$_3$ஹாத்மாபி$_4$மாநியாய் தே$_3$ஹத்தினுடைய இருப்பிலே ருசி பிறக்கைக்கடியான பாபத்தையுடைய அடியேனுக்கு இவ்வாபி$_4$முக்$_2$யமிருக்கும் காலத்திலேயே தேவரீர் இப்பாபத்தைப் போக்கியருளவேணுமென்கிறார். இப்போது இவர் ஆபி$_4$முக்யத்தைச் சொல்லுகிறது அவர் பண்ணும் ரக்ஷணத்திற்கு ஹேதுவாகவன்று; அது புருஷார்த்த$_2$மாகைக்காக. புருஷனாலே அர்த்தி$_2$க்கப் படுமதிறே புருஷார்த்த$_2$ம். (யதிராஜ ஶீக்$_4$ரம்) அத்தலையில் வைராக்$_3$யத்தால் வந்த புகரைக்கண்டு அது, தமக்குமுண்டாகவேணுமென்று பதறுகிறாராகவுமாம். ''ஆசாரே ஸ்த$_2$ாபயத்யபி'' என்கிறபடியே ஶிஷ்யனைத் தன்நிலையிலே நிறுத்துகையும் ஆசார்யக்ருத்யமிறே. மோக்ஷமும் பரமஸாம்யாபத்தியிறே. ''ஶீக்$_4$ரம் ஹர'' என்று பாபநிவ்ருத்திப்ரார்த்த$_2$னையன்றோ ஶாப்$_3$த$_3$மாகத் தோற்றுகிறது. ஸ்வரூபப்ராப்தி யன்றே யென்னில், அது அப்படியேயாகிலும் தே$_3$ஹத்தில் ருசிஜநகமான பாபம் கழியவே தே$_3$ஹத்தில் ருசி கழியும். அது கழியவே ருசி நிர்விஷயமாயிராமையாலே

*ஆத்மஸ்வரூபத்தில் ருசியுண்டாம். அது உண்டானவாறே ஸ்வரூபாநுரூப ஸித்$_3$தே$_4$ாபாயஸ்வீகாரமுண்டாம். அத்தால் ஸ்வரூபம் நிறம்பெறும். ஆகையாலே விரோதி$_4$ நிவ்ருத்தியை ப்ரார்த்தி$_2$த்தபோதே தன்னடையே ஸ்வரூபாவிர்ப$_4$ாவம் ப்ரார்த்தி$_2$த்ததாய்விடும். (13)*

वाचामगोचरमहागुणदेशिकाग्र्यकूराधिनाथकथिताखिलनैच्यपात्रम् ।
एषोहमेव न पुनर्जगतीदृशस्तद् रामानुजार्य! करुणैव तु मद्गतिस्ते ।। (१४)

**வாசாமகோ$_3$சர மஹாகு$_3$ண தே$_3$ஶிகாக்$_3$ர்ய–**
**கூராதி$_4$நாத$_2$ கதி$_2$தாகி$_2$ல நைச்யபாத்ரம்।**
**ஏஷோऽஹமேவ ந புநர்ஜக$_3$தீத்$_3$ருஶஸ்தத்$_3$–**
**ராமாநுஜார்ய! கருணைவ து மத்$_3$க$_3$திஸ் தே।।** *14.*

*அவ.– கீழ், ''அல்பாऽபி'' என்று தொடங்கி இவ்வளவும் வர தம்முடைய ஆகிஞ்சந்யத்தையும் அபராத$_4$பூ$_4$யஸ்த்வத்தையும் விண்ணப்பம்செய்து மேலிரண்டு ஶ்லோகங்களாலே தம்முடைய அநந்யக$_3$தித்வத்தை விண்ணப்பம் செய்கிறுர். அதில் இஶ்லோகத்தில் இவர் 'அல்பாऽபி' முதலாக இவ்வளவும் வர தம்முடைய தோ$_3$ஷபூ$_4$யஸ்த்வத்தை விண்ணப்பம் செய்தவாறே நீரும் ஆழ்வான் போல்வாரிலொருவரென்ன, அங்ஙனன்று அடியேன் மெய்யே நீசனுகையாலே அடியேனுக்கு தேவரீர்க்ருபையொழிய மற்றொரு க$_3$தியில்லை யென்கிறுர் (வாசாமகோ$_3$சரேத்யாதி$_3$யாலே).*

***வ்யா–*** *(வாசாமகோ$_3$சர) ''யத$_2$ா வாசோ நிவர்த்தந்தே'' (தை.ஆந) ''மொழியைக்கடக்கும்'' (இரா.நூ 7) என்கிறபடியே ப்$_3$ரஹ்மாநந்த$_3$ம் போலே வாக்காலே பரிச்சே$_2$தி$_3$த்து சொல்ல அரியவைகளாய், (மஹா) ''அப்ராப்ய மநஸா ஸஹ'', ''பெரும்புகழான்''(இரா.நூ 7) என்கிறபடியே மநஸ்ஸாலும் பரிச்சே$_2$தித்து அறியவொண்ணுதவைகளாயிருக்கிற (கு$_3$ண) த$_3$யாதி$_3$ கு$_3$ணங்களையுடையராய்.*

*உடையவர் காலத்திலே ஒருநாள்வரையிலே ஆழ்வானை கத$_3$லீத$_3$ளக்ருந்தநத்திலே நியமிக்க அவருமது செய்யப்புக்கு ஆயுத$_4$ஸ்பர்ஶத்தால் ஜலம் பொசியக் கண்டு மூர்ச்சித்தாரென்று ப்ரஸித்$_3$த$_4$மிறே. இப்படியேயாயிற்று மற்றை கு$_3$ணங்களும் இருப்பன. ப்$_3$ரஹ்மகு$_3$ணம் போலே தத$_3$ாஶ்ரிதகு$_3$ணங்களும் அபரிச்சி$_2$ந்நங்களோவென்ன, ஆம் அபரிச்சி$_2$ந்நங்களே. ''ஸ ஏகோ ப்$_3$ரஹ்மண ஆநந்த$_3$: ஶ்ரோத்ரியஸ்ய ஶாகாமஹதஸ்ய'' (தை.ஆந) ''ஈறிலின்பத்திருவெள்ளம் யான் மூழ்கினன்'' (திருவாய் 2–6–8) என்று ப்$_3$ரஹ்மத்துக்குண்டான ஆநந்த$_3$ம் நிஷ்காமனுன ஶ்ரோத்ரியனுக்கு முண்டென்றிறே வேத$_3$புருஷன் சொல்லி வைத்ததும்.*

*(தே$_3$ஶிகாக்$_3$ர்ய) 'யோ வைதாம் ப்$_3$ரஹ்மணோ வேத$_3$ அம்ருதேநாவ்ருதாம் புரீம்'' () ''விண்ணை–வாழ்த்துவர்'' () என்கிறபடியே தாம் அத்தே$_3$ஶவிஶேஷத்தை யறிந்து அதின் வைலக்ஷண்யத்தைப் பிறர்க்கும் உபதே$_3$ஶிக்குமவர்களில் தலைவராயிருக்கிற.*

இவருக்கு தே$_3$ஶிகரில் தலைமையாவது – ''அர்வாஞ்சோ யத்பத$_3$ஸரஸிஜ த்$_3$வந்த்$_3$வமாஶ்ரித்ய பூர்வே மூர்த்$_4$நா யஸ்யாந்வயமுபக$_3$தா தே$_3$ஶிகா முக்திமாபு:। ஸோऽயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்த$_2$ாம் யத்ஸம்ப$_3$ந்த$_4$ாத$_3$மநுத கத$_2$ம் வர்ண்யதே கூரநாத$_2$:'' என்கிறபடியே ஸ்வஸம்ப$_3$ந்த$_4$மாத்ரத்தாலே பூர்வாபர கு$_3$ரூத்தாரகரான எம்பெருமானாரும் இவர் ஸம்ப$_3$ந்த$_4$ங்கொண்டு தமக்குப் பேறுதப்பாதென்று அறுதியிடலாயிருக்கை.

அன்றிக்கே, உடையவருக்கு ஶ்ரீப$_4$ாஷ்யகரணஸஹகாரித்வத்தால் வந்த தலைமையாகவுமாம். ஶிஷ்யாசார்யலக்ஷணஸீமாபூ$_4$மியாகையாலே வந்த தலைமையாகவுமாம். (கூராதி$_4$நாத$_2$) ஸ்வாவதாரத்தாலே அவ்வூரை ஸநாத$_2$மாக்கி அதுவே தனக்கு நிரூபகமாம்படியிருக்கிற கூரத்தாழ்வானுலே. (கதி$_2$த) ''க்ஷோதீ$_3$யாநபி'' (ஶ்ரீ ஸ்த. 5) இத்யாதி$_3$களாலே அருளிச்செய்யப்பட்டவைகளாய். ''கதி$_2$த'' என்கையாலே அவரருளிச்செய்தாரித்தனை போக்கி அவர்க்கு இதில்லை யென்கிறது. (அகி$_2$ல) அவரருளிசெய்ததில் ஒன்று குறையாத (நைச்ய) நீசதைக்கு (பாத்ரம்) கொள்கலன். இங்கு நீசதையாவது– அஹங்காரம். இதுதான் தே$_3$ஹாத்மாபி$_4$மாநரூபமாயும், ஸ்வாதந்த்ர்யாபி$_4$மாநரூபமாயும் ஶேஷத்வாபி$_4$மாநரூபமாயும் கர்த்ருத்வாபி$_4$மாநரூபமாயும் இருக்கையாலே ''அகி$_2$ல'' என்கிறது.

(ஏஷோऽஹமேவ) இஶ்ஶரீரவிஶிஷ்டனான அடியேன். இந்நிர்தே$_3$ஶத்தாலே ஸ்வநைச்யத்தில் பூர்வஶரீரஸமாப்தமாதல், உத்தரஶரீரஸமாபநீயமாதல் இல்லை என்கிறது. (அஹமேவ) மற்றொருவரில்லை. (ஏஷோऽஹமேவ) மாரீசன் ம்ருக$_3$ வேஷத்தை த$_4$ரித்தாப்போலே ஶரணாக$_3$தவேஷத்தை த$_4$ரித்த அடியேனென்கிறார்.

(ந புநர்ஜக$_3$தீத்$_3$ருஶ:) இப்படிக்கொத்தவன் இஜ்ஜக$_3$த்திலே கிடையாதமாத்ர மன்றிக்கே சதுர்த$_3$ஶபு$_4$வநங்களிலும், அண்ட$_3$ாந்தரங்களிலும் கிடையாதென் கிறார். அவ்யயாநாம் அநேகார்த்த$_2$கத்வமாகையாலே ''ஈத்$_3$ருஶ: புந:'' என்று ஸ்வஸத்$_3$ருஶனுடைய ஸ்வேதரவ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. அதாவது – தம்மைப்போலே பரிபூர்ணநைச்யபாத்ரமுமன்றிக்கே ஸ்வேதரரைப்போலே அல்பநைச்யபாத்ரருமன்றிக்கே, கிஞ்சிந் ந்யூநையான நைச்யபாத்ரமுமாயிருக்கை. கு$_3$ணாதி$_4$கமிறே உபமாநமாவது – தத்பரிபூர்ணநைச்யபாத்ரம் அடியேனான படியாலே அடியேனுக்குப் புகலிடம் தேவரீர் க்ருபையேயென்கிறார்.

(ததி$_3$த்யாதி$_3$) அடியேனொத்த பரிபூர்ணநைச்யபாத்ரம் ஜக$_3$த்தில் கிடையாமையால் தேவர்க்ருபைக்குப் புகுமிடம் அடியேனேயென்கிறார். (ராமாநுஜார்ய) ''ந கஶ்சிந் நாபராத்$_4$யதி'' (ரா.யுத் 113–43) என்னும் பிராட்டியை அநுஸரித்துத் திருவவதரித்து, அடியேனுடைய நைச்யம் அடியேன் சொல் கொண்டறிய வேண்டாதபடி ஸ்வதஸ்ஸர்வஜ்ஞரானவரேயென்று ஸம்பே$_3$ாதி$_4$க் கிறார். நீர் பரிபூர்ண நைச்யபாத்ரமாகுங்காட்டில் உமக்கு நம் கருணை புகலிடமாக வேண்டியதென் னென்ன (ராமாநுஜ) தம் திறத்தில் தீரக்கழிய அபராத$_4$ங்களைச் செய்த ராக்ஷஸிகளை திருவடி சித்ரவத$_4$ம் பண்ண உத்$_3$யோகி$_3$க்க, அப்போது அவனோடு மறுதலைத்து ''கார்யம் கருணமார்யேண'' (ரா.யுத் 113–43) என்று குற்றமே

பச்சையாக ரக்ஷிக்கும் பிராட்டியை அநுஸரித்தன்றோ தேவரீர் திருவவதரித்த தென்கிறார்.

(ஆர்ய) தேவரீர் க்ருபை பண்ணுகைக்குப் போரும்படியான நைச்யத்தை அறிகைக்கீடான ஸர்வஜ்ஞதையை உடையவரன்றோ தேவரீரென்கிறார். இத்தால் தேவரீர் க்ருபைபண்ணுகைக்கு இவனுக்கு மேற்படத் தண்ணியனில்லையென்னும் படியான விஷயம் வேண்டியிருந்தாலும் அடியேனை க்ருபைசெய்தருளவேணும். தேவரீர்திருவவதாரத்தைப் பார்த்தாலும் அடியேனை க்ருபைசெய்தருளவேணும் என்கிறார். தேவரீர்க்ருபையைப்பார்த்தாலும் அடியேனைக்ருபை செய்தருளவேண்டும்.

(கருணைவ து மத்$_3$க$_3$திஸ்தே) த$_3$யநீயரைக் கண்டால் த$_3$யை பண்ணியல்லது த$_4$ரிக்கமாட்டாத ம்ருது$_3$ப்ரக்ருதிகரான தேவரீருடைய. (கருணைவது) த$_3$யநீயரை யொழியத் தனக்கு விஷயம் கிடையாத க்ருபை தானே. (மத்க$_3$தி:) தேவரீர் க்ருபைக்குப்போரும்படி குற்றங்களைச் செய்யுமடியேனுக்குப் புகலிடமென்கிறார். (தே கருணைவ) ஈஶ்வரன்க்ருபைபோலே ஸ்வாதந்த்ர்யாபி$_4$பூ$_4$தமன்றிக்கே, தண்ணளி விஞ்சியிருக்கும் தேவரீருடைய க்ருபையே அநந்யக$_3$திகனான அடியேனுக்கு உபாயமென்கிறாராகவுமாம்.

(மத்$_3$க$_3$திஸ்து தே கருணைவ) அடியேனுடைய ஸாத$_4$நம் ஸாத$_4$நாந்தர விலக்ஷணமென்கிறார். கர்மஜ்ஞாநப$_4$க்திகள் அஹங்காரக$_3$ர்ப$_4$ங்களாய் சேதந ஸாத்$_4$யங்களாய் அபாயப$_3$ஹுளங்களாய் விளம்ப்$_3$யப$_2$லப்ரத$_3$ங்களாய் ஸ்வரூப விரோதி$_4$களுமாயிருக்கும். ப்ரபத்தி நிரஹங்காரமாய், ஸ்வதஸ்ஸித்$_3$த$_4$மாய், அபாயக$_3$ந்த$_4$ரஹிதமாய், அவிளம்ப்$_3$யப$_2$லப்ரத$_3$மாய், ஸ்வரூபாநுரூப மாயிருந்ததேயாகிலும் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யக$_3$ர்ப$_4$மாய் ப$_4$யஜநகமாயிருக்கும். அடியேனுடைய உபாயம் அஹங்காரக$_3$ர்ப$_4$மன்றிக்கே, ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்தால் வரும் ப$_4$யமுமின்றிக்கேயிருக்கும்.

அது யத்$_3$ரூபமென்னில் (தே கருணைவ) ஈஶ்வரகருணையை உள் கொண்டிருக்கும் தேவரீருடைய கருணையே வடிவாயிருக்குமென்கிறார். ஆசார்யன் ஈஶ்வரபரதந்த்ரன் ஆகையாலும் ஈஶ்வரனுக்கு அபி$_4$மதவிஷயமாகையாலும் ஆசார்யக்ருபை ஸ்வாதந்த்ர்யபராஹதிக$_3$ந்த$_4$மின்றிக்கே ஈஶ்வரகருணாக$_3$ர்ப$_4$மா யிருக்குமென்கிறது. (14)

शुद्धात्मयामुनगुरूत्तमकूरनाथभट्टाख्यदेशिकवरोक्तसमस्तनैच्यम् ।
अद्यास्त्यसङ्कुचितमेव मयीह लोके तस्माद्यतीन्द्र! करुणैव तु मद्गतिस्ते ।।(१५)

**ஶுத்$_3$தா$_3$த்மயாமுநகு$_3$ருத்தம கூரநாத$_2$–**
**ப$_4$ட்டாக்$_2$யதே$_3$ஶிகவரோக்தஸமஸ்தநைச்யம்।**
**அத்$_3$யாऽஸ்த்யஸங்குசிதமேவ மயீஹலோகே**
**தஸ்மாத்$_3$யதீந்த்$_3$ர! கருணைவ து மத்$_3$க$_3$திஸ்தே।। (15)**

**அவ.**– ''கூராதி$_4$நாத$_2$கதி$_2$தாகி$_2$லநைச்ய பாத்ரமேஷோऽஹமேவ'' என்று இவர் விண்ணப்பம் செய்தவாறே, இவ்வளவேயோ உமக்குள்ள நைச்யம்.

மற்றவர்களநுஸந்தி$_4$த்தது உமக்கில்லையோவென்ன, அடியேன் ஆழ்வானை உபலக்ஷணமாகக்கொண்டு விண்ணப்பம் செய்தேனித்தனைபோக்கி, அவ்வள விலே பர்யவஸிதனன்று. அனைவரும் ஸ்வக$_3$தமாக அநுஸந்தி$_4$த்த நைச்யமெல்லாம் குறைவறக்கிடப்பது அடியேனிடத்திலென்கிறார் (ஶுத்$_3$தே$_4$த்யாதி$_3$யாலே)

**வ்யா.–** (ஶுத்$_3$த$_4$ாத்ம) ஆத்மஶப்$_3$த$_3$ம் மநோவாசியாய் ஶுத்$_3$த$_4$மான திருவுள்ளத்தையுடையவர்களாய். திருவுள்ளத்துக்கு ஶுத்$_3$தி$_4$யாவது – தே$_3$ஹத்தி லும், தே$_3$ஹாநுப$_3$ந்தி$_4$களிலும், ஆத்மாவிலும், ஆத்மாநுப$_3$ந்தி$_4$களிலும் ஸக்தமன்றிக்கே, ஈஶ்வரனிடத்திலும், தத$_3$நுப$_3$ந்தி$_4$களிடத்திலும் ஸக்தமா யிருக்கை. இதிறே ''ந காமகலுஷம் சித்தம் மம தே பாத$_3$யோஸ்ஸ்தி$_2$தம்। காமயே வைஷ்ணவத்வந்து ஸர்வஜந்மஸு கேவலம்'' (ஜிதந்தே–13) என்றும் ''உற்றோமே யாவோம் உனக்கே நாமாட்செய்வோம்'' (திருப்பாவை–29) இத்யாதி$_3$களிலே சொல்லப்படுகிறது.

(யாமுந) முற்காலத்திலே ஸ்ரீமந்நாத$_2$முனிகள் ஸ்ரீப்$_3$ருந்த$_3$ாவநத்தில், யமுநாதீரத்தில் பெண்கள் படித்துறையைக் காக்கையாலே அதுவே நிரூபகமாய் யமுனைத்துறைவர் என்கிற திருநாமமுடைய கண்ணனை ஸேவித்துக் கொண்டிருக்கையாலே அவரிடத்தில் ப்ரேமம் தலையெடுத்து, அவர் திருநாமம் சாத்தத்திருவுள்ளமாய் ஈஶ்வரமுநிகளைக் குறித்து உமக்கு ஒருகுமாரருண்டாகப் போகிறார். அவருக்கு யமுனைத்துறைவர் என்று திருநாமம் சாத்துமென்று நியமித்தருள, அவரும் அப்படியே செய்தருளுகையாலே யமுனைத்துறைவர் என்கிற திருநாமமுடைய ஸ்ரீஆளவந்தாராலும்.

(கு$_3$ரூத்தமகூரநாத$_2$) ஸ்வோபதே$_3$ஶாதி$_3$களாலே ஸ்வாஶ்ரிதாஜ்ஞாந நிவர்த்தகரான ஆசார்யர்களில் தலைவரான ஆழ்வானும். இவர்க்கு அஜ்ஞாந நிவர்த்தகரில் தலைமையாவது – உடையவர் தமக்குமுட்பட அஶிக்ஷணீயரான அமுதனாரை தாம் அநுவர்த்தித்து வஶீகரித்து உடையவர்க்காளாக்குகை. ஆகையிறே அமுதனாரும் ''மொழியைக்கடக்கும்'' (இரா.நூ 7) என்றருளிச் செய்தது.

(ப$_4$ட்டாக்$_2$யதே$_3$ஶிகவர) விஷ்ணுபரத்வஸ்த$_2$ாபகமான ஸ்ரீவிஷ்ணுபுராண ப்ரவர்த்தகராகையாலே மஹோபகாரகரான ஸ்ரீபராஶரரிடத்தில் உபகார ஸ்ம்ருதியாலே அவர்திருநாமம் சாத்தத்திருவுள்ளமாய், அது செய்யப்பெறாதே திருநாட்டுக்கெழுந்தருளின ஸ்ரீஆளவந்தார்குறைதீர உடையவராலே இவரும் ஸ்ரீபராஶரப$_4$க$_3$வான் போல்வாரொருவரென்று திருவுள்ளம்பற்றி ஸ்ரீபராஶரபட்ட ரென்று சாத்தப்பட்ட திருநாமமுடையராய் இவ்விபூ$_4$தியிலிருந்தே அவ்விபூ$_4$தியில் அநுப$_4$வத்தை அநுப$_4$விக்குமவர்களில் ஶ்ரேஷ்ட$_2$ரான ஸ்ரீபராஶரப$_4$ட்டராலேயும். இவருக்கு தே$_3$ஶிகரில் ஶ்ரைஷ்ட்$_2$யமாவது – ப$_4$ட்டர் திருவவதரித்த பின்பு பரமபத$_3$த்துக்கும் லீலாவிபூ$_4$திக்கும் இடைச்சுவரில்லை யென்னும்படியாயிருக்கை.

(உக்த) ஸ்வஸ்வப்ரப$_3$ந்த$_4$ங்களில் ஸ்வக$_3$தமாக அநுஸந்தி$_4$க்கப்பட்டதாய்

இத்தால் இவர்கள் ஶுத்$_3$த$_4$ாத்மாக்களாகையாலே அவர்களுக்கு நைச்யமில்லையே யாகிலும் அவர்கள் ஸ்வக$_3$தமாக நைச்யத்தை அநுஸந்தி$_4$க்கிறது – ஸ்வஸம்ப$_3$ந்தி$_4$யான அடியேன் நைச்யமே ஸ்வநைச்யமென்னுமபி$_4$ப்ராயத்தாலே யென்கிறது. ''தி$_4$க$_3$ஶுசிமவிநீதம் நிர்த$_3$யம் மாமலஜ்ஜம்'' (ஸ்தோ.ர.47) ''அபராத$_4$ ஸஹஸ்ரப$_4$ாஜநம்'' (ஸ்தோ.ர. 48) ''அமர்யாத$_3$: க்ஷுத்$_3$ரஶ்சலமதிரஸூயா ப்ரஸவபூ$_4$:'' (ஸ்தோ.ர.62) என்று ஸ்ரீஆளவந்தாரும், ''ஹா ஹந்த ஹந்த ஹதகோऽஸ்மி க$_2$லோஸ்மி தி$_4$ங் மாம்'' (வைகுண்ட$_2$ ஸ்த.84) ''அத்$_3$யாபி நாஸ்த்யுபரதிஸ் த்ரிவித$_4$ாபசாராத்'' (அதிமாநு. ஸ்த.59), ''ஹை நிர்ப$_4$யோऽஸ்ம்யவிநயோऽஸ்மி'' (வரத$_3$.ஸ்த.74), ''வித்$_3$வேஷமாநமத$_3$ராக$_3$விலோப$_4$ மோஹாத்$_3$யாஜாநபூ$_4$மி:'' (வரத$_3$.ஸ்த.76) என்று ஆழ்வானும், ''அதிக்ராமந்நாஜ்ஞாம் தவ விதி$_4$நிஷேதே$_4$ஷு பவ$_4$தேப்யபி$_4$த்$_3$ருஹ்யந் வாக்$_3$தீ$_4$க்ருதிபி$_4$ரபிப$_4$க்தாய ஸததம் । அஜாநந் ஜாநந் வா ப$_4$வத$_3$ஸஹநீயாக$_3$ஸி ரத:'' (ஸ்ரீர.ஸ்த.2–91) என்று ப$_4$ட்டரும் அருளிச்செய்தாரிறே. (ஸமஸ்த) அகி$_2$லமானவென்னுதல்; ஒன்றேடொன்று பிணைத்துக்கொண்டு இருக்கிறவென்னுதல்; இத்தால் தனித்தனியே விப$_4$ஜித்தறிய வொண்ணுதென்கிறது. (நைச்யம்) ஒருவிஶேஷம் சொல்லாமையாலே ஏகவசநம் ஜாத்யபி$_4$ப்ராயமாய் நைச்யத்வாவச்சி$_2$ந்நமெல்லா மென்கிறது. (அத்$_3$ய) தேவரீரை ஶரணமடைகிறவிக்காலத்திலே; ஸ்வதோ$_3$ஷத்தை முன்னிட்டிறே ஶரணம் புகுகிறது. ''ராவணஸ்யாநுஜோ ப்$_4$ராதா விபீ$_4$ஷண இதி ஶ்ருத:'' (ரா.யு.17–12) என்று ஸ்வதோ$_3$ஷத்தை முன்னிட்டிறே ஸ்ரீவிபீ$_4$ஷணுழ்வான் ஶரணம் புகுந்தது. ஶரணுக$_3$த்யநந்தரம் ''நிர்தோ$_3$ஷம்'' (ஸாத்த்வத ஸம்.) என்கையாலே நைச்யம் கிடையாதென்று கருத்து.

(அத்$_3$ய இஹ லோகே) ''பல்லுயிர்க்கும் வீடளிப்பான் விண்ணின் தலைநின்று இம்மண்ணின்தலத்துதித்து'' (இரா.நூ 95) என்கிறபடியே ஸர்வசேதநரையும் உத்தரிப்பிக்க தேவரீர் திருவவதரித்தருளின இத்தே$_3$ஶத்திலேயென்னுதல், இக்கர்ம பூ$_4$மியிலேயென்னுதல். (இஹ மயி) ஶரணமடைகிற அடியேனிடத்திலேயென்னுதல், கத்$_3$யந்தரஶூந்யனை அடியேனிடத்திலேயென்னுதல், ''அகி$_2$லநைச்ய பாத்ரம் ஏஷோऽஹமேவ'' என்று தன் நெஞ்சுஉணர பாபங்களைச் செய்து அது தன்னையே தன்வாயாலே சொல்லவல்லனை வடியேனிடத்திலேயென்னுதல். (இஹாத்$_3$யமய்யஸ்தி) இத்தே$_3$ஶத்துக்காக இக்காலத்துக்காக அடியேனிடத்திலே உண்டு.

(அஸங்குசிதமேவாஸ்தி) நைச்யம் குறைவற வேணுமாகில் ஸங்கோசமின்றியே அடியேனிடத்தில் உண்டென்கிறுர். (அஸங்குசிதம் நைச்யம் மய்யத்$_3$யைவாஸ்தி) உத்தரகாலத்தில் ''ஸ்யாத்'' என்று ப்ரார்த்தி$_2$த்தாலும் கிடையாது (மயி இஹைவாஸ்தி) அடியேனிடத்தில் நைச்யமுள்ளது இவ்விபூ$_4$தியிலேயே. மேல் க$_3$ந்தவ்யதே$_3$ஶம் தேவரீர்திருவடிகளாகையாலே நைச்யம் கிடையாதென்கிறுர். (மய்யேவநைச்யம் அஸங்குசிதம்) அஸங்குசிதமாயுள்ளது அடியேனிடத்திலேயே. மற்றையாரிடத்திலே உண்டாகில் ஸங்குசிதமாய்க்காணும் உள்ளது. அஸங்குசித மாகையாவது – குறைத்தலின்றிக்கேயிருக்கை. குறைத்தலாவது நைச்யத்தில்

*சிறிதம்ஶமில்லாமை. அதுண்டாவது ஆஶ்ரயாந்தரம் உண்டாகிலிறே. புறம்பு ஆஶ்ரயாந்தரமில்லாமையாலே நைச்யஶப்$_3$த$_3$வாச்யமெல்லாம் குறைவறக் கிடப்பது அடியேனிடத்திலேயேயென்கிறுர். (இஹாத்$_3$யமய்யஸ்த்யேவ) தே$_3$ஶமோ இருள்தருமாஞாலமான இத்தே$_3$ஶம். காலமோ ஸத்த்வவிரோதி$_4$யான கலி ஸாம்ராஜ்யம் பண்ணும்காலம். பாத்ரமோ ''ஸோऽஹம் க்ஷுத்$_3$ரதயா'' என்கிற படியே அதிக்ஷுத்$_3$ரனை அடியேன்; ஆகையாலே இவனிடத்தில் குறைவற நைச்யம் உண்டோஇல்லையோ என்று ஸம்ஶயிக்கவேண்டாதபடி அவஶ்யம் உண்டென்கிறுர். ''இஹாத்$_3$ய'' என்று தே$_3$ஶகாலங்களை விஶேஷிக்கையாலே தே$_3$ஶாந்தரே காலாந்தரே தம்மளவில் அஸங்குசிதநைச்யமில்லாமையாதல் ஆஶ்ரயாந்தரத்திலுண்டாகையாதல் தோற்றுமிறே; அத்தை வ்யாவர்த்திக்கிறது ஏவகாரம்.*

*அதெங்ஙனேயென்னில், தே$_3$ஶாந்தரத்தில் ஓராஶ்ரயமுண்டாய், இங்கு சிறிது விஜாதீயநைச்யமுண்டாகில் இவரிடத்தில் நைச்யம் அஸங்குசிதமாகக் கூடாது. காலாந்தரத்தில் ஓராஶ்ரயமுண்டாய், அங்கும் சிறிது விஜாதீய நைச்யமுண்டாகக்கூடுமாகில் அது இவர்க்கு இப்போது இல்லாமையாலே, இவரிடத்தில் நைச்யம் அஸங்குசிதமாகக்கூடாது. ஆகையாலே தேஶாந்தர காலாந்தரங்களிலும் அடியேனொத்த நைச்யாஶ்ரயமில்லையென்னுமிவ்வர்த்த$_2$த்தை ஏவகாரம் தோற்றுவிக்கிறது.*

*(தஸ்மாத்) இத்தே$_3$ஶத்தில் இக்காலத்திலின்றிக்கே, தே$_3$ஶாந்தரத்திலும் காலாந்தரத்திலும் அடியேனொத்த நைச்யாஶ்ரயம் கிடையாமையாலே (தே கருணு து மத்க$_3$திரேவ) இவனத்தனை நீசரில்லையென்னுமவனை கடாக்ஷிக்கத்திருவுள்ளம் பற்றியிருக்கிற தேவரீருடைய ஸம்ப$_3$ந்தி$_4$நியாய், ஈஶ்வரகருணைபோலே ஸ்வாதந்த்ர்யபராஹதிக$_3$ந்த$_4$ஸம்ஶயமாதல் ரக்ஷ்யாபேக்ஷாப்ரதீக்ஷையாத லன்றிக்கே விலக்ஷணையான கருணையானது. ''அருட்கும் அஃதேபுகல்'' (இரா.நூ 48) என்கிறபடியே அடியேனையே விஷயமாக உடைத்தாகாநின்றது.*

*கருணை ஜீவிப்பது. அபராதி$_4$களிடங்களிலேயாகுல் அது பூர்ணமானவிடம் அதுக்கு மிகவும் ஜீவநமாகையாலே அஸங்குசிதாபராதி$_4$யான அடியேனே அதுக்குப் புகலிடம் என்கிறுர். மத்$_4$யே 'யதீந்த்$_3$ர' என்றது இவர் தம்மோடொத்த நீசனில்லை யென்று விண்ணப்பம் செய்தவாறே இவர் தம்மை அங்கீ$_3$கரித்தோமாம் விரகேதோ வென்று திருவுள்ளத்திலே ஓடுகிறபடி தோற்ற இருக்கக்கண்டு யதீந்த்$_3$ரவென்று ஸம்பே$_3$ாதி$_4$க்கிறுர். இத்தால் அடியேனை அங்கீ$_3$கரிக்குமிடத்தில் கருணையொழிய மற்றொரு விரகில்லையென்று கருத்து.*

*(தஸ்மாத் மத்க$_3$திஸ்து தே கருணைவ) ''நிகரின்றி நின்றவென் நிசதைக்கு நின்னருளின்கணன்றி புகலொன்றுமில்லை''(இரா.நூ 48) என்கிறபடியே தீரக்கழிய அபராத$_4$ங்களைப்பண்ணி, அநுதாபமுமின்றிக்கே ஈஶ்வராங்கீ$_3$காரத்துக்கும் அவ்வருகான அடியேனுக்குப் புகலிடம் தாபத்ரயாபி$_4$பூ$_4$தராய் ஸம்ஸாரிகள் படும் அலமாப்புகண்டு அபேக்ஷாநிரபேக்ஷராய் க்ருபை பண்ணும் தேவரீருடைய*

கருணையொழிய மற்றொன்றில்லையென்கிறார். ''தத$_3$ஹம்த்வத்$_3$ருதே ந நாத$_2$வாந் மத்$_3$ருதே த்வம் த$_3$யநீயவாந் ந ச'' (ஸ்தோ.ர.51) என்று பெரியமுதலியார் ப$_4$க$_3$வத்$_3$விஷயத்திலே அநுஸந்தி$_4$த்தாப்போலே இவரும் இவ்விஷயத்திலே அநுஸந்தி$_4$க்கிறார்.(15)

शब्दादिभोगविषया रुचिरस्मदीया नष्टा भवत्विह भवद्दयया यतीन्द्र! ।
त्वद्दासदासगणनाचरमावधौ यः तद्दासतैकरसताऽविरता ममास्तु ।। (१६)

**ஶப்$_3$தா$_3$தி$_3$போ$_4$க$_3$விஷயா ருசிரஸ்மதீ$_3$யா**
**நஷ்டா ப$_4$வத்விஹ ப$_4$வத்$_3$த$_3$யயா யதீந்த்$_3$ர!।**
**த்வத்தா$_3$ஸதா$_3$ஸக$_3$ணநாசரமாவதௌ$_4$ யஸ்**
**தத்$_3$தா$_3$ஸதைகரஸதாऽவிரதா மமாஸ்து।।** **16.**

**அவ.–** கீழிரண்டு ஶ்லோகங்களாலும் அடியேனுக்கு தேவரீர்க்ருபையொழிய மற்றொரு புகலிடமில்லையென்று இவர் தம்முடைய அநந்யக$_3$தித்வத்தை விண்ணப்பம் செய்தவாறே உமக்கு நாம் செய்ய வேண்டியதென்னென்ன, கீழ் வாசேத்யாதி$_3$யால் தாம் ப்ரார்த்தி$_2$த்த ப்ராப்யத்தினுடைய சரமாவதி$_4$யை விரோதி$_4$ நிவ்ருத்தி பூர்வகமாகச் செய்தருளவேணுமென்கிறார் (ஶப்$_3$தா$_3$தீ$_3$த்யாதி$_3$யால்).

**வ்யா.–** (ஶப்$_3$தா$_3$தி$_3$போ$_4$க$_3$விஷயா ருசி:) ''நிதித்$_4$யாஸிதவ்ய:'' (ப்$_3$ருஹதா$_3$ 4–4–5) ''ஆசார்யதே$_3$வோ ப$_4$வ'' (தை.ஶிக்ஷா) ''தே$_3$வமிவாசார்யமுபாஸீத'', ''அதிதி$_2$தே$_3$வோ ப$_4$வ'', ''கு$_3$ருபாதா$_3$ம்பு$_3$ஜம் த்$_4$யாயேத்'', ''ஆக$_3$தம் வைஷ்ணவம் ஸாக்ஷாத்$_3$ விஷ்ணுரித்யபி$_4$சிந்தயேத்।தத்க்ருபாத$_3$த்த சரணௌ மூர்த்$_4$நி பா$_2$லே த்$_3$ருஶோர்ஹ்ருதி$_3$ விந்யஸ்ய ப$_4$க்திபூர்வந்து க்ஷாளயேத்$_3$ க$_3$ந்த$_4$வாரிணா।।'' என்று ஏவமாதி$_3$ ப்ரமாணங்களாலே ப$_4$க$_3$வத் பா$_4$க$_3$வதாசார்ய விஷயங்களிலே அபி$_4$ஹிதையான ப$_4$க்தியானது அடியேனுக்கு ''விஷஸ்ய விஷயாணாஞ்ச தூ$_3$ரம் அத்யந்தமந்தரம்। உபபு$_4$க்தம் விஷம் ஹந்தி, விஷயாஸ் ஸ்மரணாத$_3$பி'' என்கிற படியே உபபு$_4$க்தமான விஷம்போலே ஶரீரமாத்ரநாஶக மன்றிக்கே ஸ்மரணமாத்ரத் தாலே அச்சே$_2$த்$_3$யமான ஆத்மஸ்வரூபத்துக்கும் நாஶகங்களாயிருக்கிற ஶப்$_3$தா$_3$தி$_3$ விஷயாநுப$_4$வத்தில் கிடீர் ப்ரவணமாய்த் தென்கிறார்.

(ஶப்$_3$தா$_3$தி$_3$போ$_4$க$_3$விஷயா ருசி:) ஶப்$_3$தா$_3$தி$_3$ விஷயாநுப$_4$வத்தையிட்டுத் தன்னை நிரூபிக்கும்படியாய்த்து ருசி; ருசி ஶப்$_3$தா$_3$தி$_3$விஷயங்களிலே ப்ரவணமாய்த் தென்கிறார். விஷயப்ரகாஶபுரஸ்ஸரமாகவிறே ஜ்ஞாநம் ப்ரகாஶிப்பது. ருசி தானும் ஜ்ஞாநவிஶேஷமிறே.

ருசிதான் தனக்கு விஹிதமான விஷயத்தை விட்டு அவிஹிதங்களான ஶப்$_3$தா$_3$தி$_3$விஷயாநுப$_4$வத்தில் ப்ரவணமாகைக்கடியென்னென்ன (அஸ்மதீ$_3$யா) ருசியானது ஜ்ஞாநவிஶேஷமாகையாலே ''தத்$_3$ஜ்ஞாநம்'' (வி.பு.6–5–87) என்றும், ''ஒண்டாமரையாள்கேள்வன் ஒருவனையேநோக்கும் உணர்வு'' (முதல் திருவ. 67)

*என்றும் சொல்லுகிறபடியே ப்ராப்தவிஷயத்திலே மண்டியிருக்குமது அவ்விஷயத்தைவிட்டு ஶப்$_3$த$_3$ாதி$_3$விஷயங்களிலே ப்ரவணமாகைக்கடி ஸ்வத: வருவதொரு ஹேது இல்லாமையாலே இனி சேதநனுடைய கர்மமாகவேண்டுகை யாலே அடியேனுடைய ஸம்ப$_3$ந்த$_4$மே அதுக்கு காரணமென்கிருர்.*

*இனிச் செய்யவேண்டியதென்னென்ன (நஷ்டா ப$_4$வது) அது இருந்தவிடந் தெரியாதே ஸ்வரூபேண நஶிக்கவேணுமென்கிருர். இவர் தாம் ஆந்ருஶம்ஸ்ய ப்ரத$_4$ாநராகையாலே உபாஸகரைப்போலே தம் புண்யபாபங்களுடைய அந்யஸங்க்$_3$ரமணத்தை ஸஹிக்கமாட்டாரிறே. ஆகையால் ''வானோமறிகடலோ மாருதமோ தீயகமோ கானோ ஒருங்கிற்றும் கண்டிலமால்'' (பெரிய திருவ 54) என்கிறபடியே போனவிடம் தெரியாமல் போகவேணுமென்கிருர். இத்தால் ப்ரபந்நனுடைய புண்யபாபரூபகர்மத்துக்கு ஸ்வரூபேண நாஶமொழிய அந்யஸங்க்$_3$ரமணமில்லையென்கிறது.*

*இங்கு இப்படி ருசிஸ்வரூபநாஶத்தை ப்ரார்த்தி$_2$த்தாராகில் ''தத்$_3$த$_3$ாஸதைக ரஸதாऽவிரதா மமாஸ்து'' என்று அது தன்னையே ப்ரார்த்தி$_2$க்கக்கூடுமோ வென்னில், இங்கு விஷயாநுப$_4$வத்தை இட்டாய்த்து ருசியை நிரூபித்தது. நிரூபகத்தையொழிய நிரூப்யஸித்$_3$தி$_4$யில்லாமையாலே நிரூபகமான விஷயாநுப$_4$வம் நஶிக்கவே தந்நிரூபிதையான ருசி தன்னடையே நஶித்ததாமிறே. ''ஸ்வர்கீ$_3$ த்$_4$வஸ்த:'' என்றுமுண்டிறே. மேல் ப்ரார்த்தி$_2$க்கப்படுகிறது த$_3$ாஸ்யைகநிரூபிதையான ருசியாகையாலே கூடும். விஶேஷணபே$_4$த$_3$ம் கொண்டு விஶிஷ்டபே$_4$த$_3$ம் சொல்லுகை ஸர்வஸம்மதமிறே.*

*இதுவாகில் தே$_3$ஶவிஶேஷத்திலே ஆகிறதென்ன (இஹ) அங்ஙனன்றிக்கே, இத்தே$_3$ஶத்திலேயாகவேணும். ஶப்$_3$த$_3$ாதி$_3$விஷயாநுப$_4$வத்துக்கேகாந்தமான இத்தே$_3$ஶத்தில் அவ்விஷயாநுப$_4$வத்தை காற்கடைகொண்டு வகுத்தவிஷயத்திலே சரமாவதி$_4$த$_3$ாஸ்யத்திலே ப்ரவணமாயிருக்கையன்றோ தேவரீர்ஸம்ப$_3$ந்தி$_4$களுக் குள்ள வைலக்ஷண்யமென்று கருத்து. ''கலியும்கெடும் கண்டுகொண்மின் கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல் மலியப்புகுந்திசைபாடியாடியுழிதரக் கண்டோம்'' (திருவாய்.5–2–1) என்கிறபடியே தேவரீரும் தேவரீராலே லப்$_4$தஸத்தாகரான தேவரீர்ஸம்ப$_3$ந்தி$_4$களுமாக உலாவுகிற இத்தே$_3$ஶத்திலே யென்னுமாம். இத்தால் த்வதீ$_3$யாநுப$_4$வவிரோதி$_4$யான விஷயாநுப$_4$வருசியைப் போக்கியருளவேணுமென்று கருத்து.*

*இதுவோ தே$_3$ஶத்தைப் பார்த்தாலும் உம்மைப் பார்த்தாலும் விஷயங்களைப் பார்த்தாலும் து$_3$ஷ்கரம். தே$_3$ஶமோ புண்யபாபங்களுடைய ப$_2$லமான ஸுக$_2$து$_3$:க$_2$ாநுப$_4$வத்துக்கேகாந்தமான தே$_3$ஶமன்றிக்கே, புண்யபாபம் வ்ருத்$_3$தி$_4$ யடையும் தே$_3$ஶம். உம்மைப்பார்த்தால் ''ஏவம் காலம் நயாமி'' என்னும்படி பாபம் செய்கையிலே கையொழியாதவர். விஷயங்களைப் பார்த்தால் ''விண்ணுளார் பெருமாற்கடிமைசெய்வாரையும் செறும் ஐம்புலனிவை'' (திருவாய் 7–1–6) என்கிறபடியே அயர்வறுமமரர்களுக்கதி$_4$பதியான ஈஶ்வரனுக்கடிமை செய்வாரை*

